# شوہر کی دس خطرناک غلطیاں

# கணவன் தவிர்க்க வேண்டிய அபாயகரமான 10 தவறுகள்

# شوہر کیلئے دس سنہری اصول

# கணவனிடம் இருக்க வேண்டிய 10 பண்புகள்


حضرت مولانا پیر ذوالفقار احمد نقشبندی، مجددی
دامت برکاتہم

ஹள்ரத் மௌலானா பீர்
**துல்ஃபிகார் அஹ்மது ஸாஹிப்**
நக்ஷ்பந்தீ, முஜத்திதீ, தாமத் பரகாதுஹும்

بسم اللہ الرحمٰن الرحیم

# شوہر کی دس خطرناک غلطیاں

# கணவன் தவிர்க்க வேண்டிய அபாயகரமான 10 தவறுகள்

# شوہر کیلئے دس سنہری اصول

# கணவனிடம் இருக்க வேண்டிய 10 பண்புகள்


حضرت مولانا پیر ذوالفقار احمد نقشبندی، مجددی
دامت برکاتہم

ஹள்ரத் மௌலானா பீர்
**துல்ஃபிகார் அஹ்மது ஸாஹிப்**
நக்ஷ்பந்தீ, முஜத்திதீ, தாமத் பரகாதுஹும்

மேற்பார்வை :
மௌலானா ஷகீல் அஹ்மது நக்ஷ்பந்தி
செல் : 94444 53232

தமிழில் :
மௌலானா S.ஷேக் அப்துல்லாஹ் யூஸுஃபி
திண்டுக்கல். செல் : 9894763618

# பொருளடக்கம்

## கணவன் தவிர்க்க வேண்டிய அபாயகரமான 10 தவறுகள்

بِسْمِ اللهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ

# மதிப்புரை

அல்லாஹ்வின் கிருபையால், சர்வதேச அளவில் மாபெரும் சீர்திருத்தப் பணி செய்து வரும் பெரியார்களில் ஹள்ரத் மௌலானா பீர் துல்ஃபிகார் அஹ்மது ஸாஹிப் தாமத் பரகாதுஹும் அவர்கள் குறிப்பிட்டுச் சொல்லப்பட வேண்டியவர்கள். பாவத்தின் காரணத்தினால் துன்பத்தில் துவண்ட மனிதர்கள், ஹள்ரத் அவர்களின் சொற்பொழிவின் மூலம் தனக்குள் சீர்திருத்தத்தை ஏற்படுத்தி இன்பமான, பரிசுத்தமான வாழ்க்கையை மேற்கொண்டவர்கள் ஏராளம். பொதுமக்கள் மட்டுமின்றி உலமாக்கள் மற்றும் ஸாலிஹீன்கள் என அனைத்துத் தரப்பினரும் ஹள்ரத் அவர்கள் மூலம் பயனடைந்துள்ளனர். குறிப்பாக தலாக் வரை சென்று விட்ட பல தம்பதிகள், ஹள்ரத் அவர்களின் உபதேசத்தின் மூலம் "சேர்ந்து சந்தோஷமாக வாழ" ஆரம்பித்து விட்டார்கள். அல்ஹம்துலில்லாஹ்! அந்த அடிப்படையில் கணவன் தவிர்க்க வேண்டிய அபாயகரமான 10 தவறுகள் மற்றும் கணவனிடம் இருக்க வேண்டிய 10 பண்புகள் என்ற தலைப்பில் ஹள்ரத் அவர்கள் ஆற்றிய அற்புதமான சொற்பொழிவை மௌலானா S.ஷேக் அப்துல்லாஹ் யூஸுஃபி, ஹள்ரத் அவர்கள் மிக அழகிய முறையில் தமிழாக்கம் செய்துள்ளார்கள். இது மனாருல் ஹுதா பல்கலை மாத இதழில் சிறிது சிறிதாக வெளிவந்தது. இதை ஒன்றாக தொகுத்து வெளியிட வேண்டுமென்ற பலரின் ஆசை மற்றும் ஆலோசனையின்படி தொகுத்து தரப்படுகிறது. அல்லாஹ் இதனை ஏற்றுக் கொள்வானாக! ஆமீன்.

அன்புடன்

மௌலானா ஷகீல் அஹ்மது நக்ஷ்பந்தி, பெங்களூரி.

# شوہر کی دس خطرناک غلطیاں

# கணவன் தவிர்க்க வேண்டிய அபாயகரமான 10 தவறுகள்

اَلْحَمْدُ لِلّٰهِ وَكَفٰى وَسَلَامٌ عَلٰى عِبَادِهِ الَّذِيْنَ اصْطَفٰى اَمَّا بَعْدُ!

فَاَعُوْذُ بِاللّٰهِ مِنَ الشَّيْطٰنِ الرَّجِيْمِ ○ بِسْمِ اللّٰهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ

وَمِنْ اٰيٰتِهٖٓ اَنْ خَلَقَ لَكُمْ مِّنْ اَنْفُسِكُمْ اَزْوَاجًا لِّتَسْكُنُوْٓا اِلَيْهَا

وَجَعَلَ بَيْنَكُمْ مَّوَدَّةً وَّرَحْمَةً ۭ اِنَّ فِيْ ذٰلِكَ لَاٰيٰتٍ لِّقَوْمٍ يَّتَفَكَّرُوْنَ ○

سُبْحَانَ رَبِّكَ رَبِّ الْعِزَّةِ عَمَّا يَصِفُوْنَ وَسَلَامٌ عَلَى الْمُرْسَلِيْنَ وَالْحَمْدُ لِلّٰهِ رَبِّ الْعَالَمِيْنَ ○

اَللّٰهُمَّ صَلِّ عَلٰى سَيِّدِنَا مُحَمَّدٍ وَّعَلٰى اٰلِ سَيِّدِنَا مُحَمَّدٍ وَّبَارِكْ وَسَلِّمْ

குடும்ப வாழ்க்கை அமைதியாக, மகிழ்ச்சி நிரம்பியதாக ஆகவேண்டும் என்றால் கணவன் தன் மனைவியுடன் வீட்டில் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்பதை அறிந்திருக்க வேண்டும். ஆனால் பலரும் இன்று அறிவதில்லை. வீடு செழிப்பாக சில வழிமுறைகளும் விதிமுறைகளும் உள்ளன. அவற்றின் அடிப்படையில் வாழ்க்கை நடத்தினால் வீடு சொர்க்கப் பூங்காவாக காட்சி அளிக்கும். எங்கு அந்த வழிமுறைகள் கைவிடப் படுகின்றனவோ அது வீடாக இருக்காது; மிருகங்களின் குகையாக மாறிவிடும்.

**திருமணத்தின் நோக்கம்**

அல்லாஹு தஆலா கூறுகிறான்:

وَمِنْ اٰيٰتِهٖٓ اَنْ خَلَقَ لَكُمْ مِّنْ اَنْفُسِكُمْ اَزْوَاجًا لِّتَسْكُنُوْٓا اِلَيْهَا

وَجَعَلَ بَيْنَكُمْ مَّوَدَّةً وَّرَحْمَةً ۭ اِنَّ فِيْ ذٰلِكَ لَاٰيٰتٍ لِّقَوْمٍ يَّتَفَكَّرُوْنَ ○

"உங்களிலிருந்தே உங்களுடைய ஜோடிகளை (மனைவியரை) அவர்களின் மூலம் நீங்கள் நிம்மதி பெறுவதற்காக உங்களுக்காக அவன் படைத்ததும், உங்களுக்கிடையே அன்பையும் இரக்கத்தையும் அவன்

ஏற்படுத்தியதும் அவனுடைய அத்தாட்சிகளில் உள்ளதாகும். நிச்சயமாக இதில் சிந்திக்கின்ற கூட்டத்தினருக்கு பல அத்தாட்சிகள் உள்ளன"

(அல்குர்ஆன் 30:21)

இந்த ஆயத்தின் மூலம் திருமணத்தின் நோக்கம் நிம்மதி பெறுவது தான் என்பது விளங்குகிறது. ஷரீஅத்–சுன்னத் வழிமுறைப்படி வாழ்க்கை நடத்துபவர்களின் குடும்ப வாழ்க்கை அமைதிப் பூங்காவாக அமையும். குடும்ப வாழ்க்கையில் கணவன் மனைவிக்கு மத்தியில் நிம்மதியின்றி எந்நேரமும் சண்டை சச்சரவு நடந்து கொண்டிருக்கிறது. ஒருவர் மற்றவரை கசப்பான வார்த்தைகளால் ஏசிக் கொள்கின்றனர். பிரச்சனைகளால் சிக்கித் தவிக்கின்றனர் என்றால் அங்கே ஏதோ தவறு நடக்கிறது என்று புரிந்து கொள்ளுங்கள். மனைவியிடமோ அல்லது கணவனிடமோ குறையிருக்கும். நமது பெரும்பாலான அனுபவம் இருவரிடத்திலும் தவறு இருக்கும் என்பது தான். ஏனெனில் ஒரு கையால் ஓசை வருவதில்லை: இரு கைகளால் தான் ஓசை எழுப்பப்படும். இருவரிடமும் தவறுகள் நிகழும் போது வாழ்க்கையின் நிம்மதி பறிக்கப் பட்டு விடுகிறது. குடும்பவாழ்க்கை மனிதனுக்கு நரகத்தின் முன்மாதிரியாகி விடுகிறது.

**மவத்தத்தும் ரஹ்மத்தும்**

திருமணத்தின் மூலம் இன்பம் நிறைந்த வாழ்க்கை எவ்வாறு கிடைக்கும் என்பதை குர்ஆன் இரண்டே வார்த்தைகளின் மூலமாக விளக்குகிறது.

وَجَعَلَ بَيْنَكُمْ مَّوَدَّةً وَّرَحْمَةً

"அவன் உங்களிடையே பிரியத்தையும் இரக்கத்தையும் ஏற்படுத்தினான்" (அல்குர்ஆன் 30:21)

இதிலுள்ள "மவத்தத்" என்ற வார்த்தை காதல் மிகைத்து நிற்கும் பரஸ்பர அன்பிற்கு சொல்லப்படும். உண்மையில் இல்லற வாழ்வில் இருபகுதிகள் உள்ளன. ஒன்று வாலிபக் காலம். இரண்டாவது முதுமைக் காலம். இளமைக் காலத்தில் கணவன் மனைவி ஏதாவது ஒரு நேரத்தில் சண்டையிட்டுக் கொண்டாலும் அவர்களின் தாம்பத்ய தேவைகள் சிறிது நேரத்தில் ஒருவரையொருவர் ஈர்க்கச் செய்து விடுகின்றன. அந்த உணர்வு அவர்களை நிர்ப்பந்தமாக இணைத்து விடுகிறது. எனவே தான் முதலில்

"மவத்தத்" பிரியம் என்ற வார்த்தை பயன்படுத்தப்பட்டுள்ளது. அதாவது இருவரிடமும் காதல் மிகைத்து நிற்கிறது.

**ரஹ்மத் - இரக்கமும் பரிவும்**

ஆனால் மனிதன் வயோதிகமடையும் பொழுது கணவனுக்கு மனைவியின் தேவை ஏற்படுவதில்லை. மனைவிக்கு கணவனின் தேவை எற்படுவதில்லை. தாம்பத்திய உறவுகள் பலவீனப்பட்டு விடுகின்றன. அல்லது முடிவடைந்து விடுகின்றன. இருவரையும் இணைத்து பிடித்திருந்த அந்த தாம்பத்தியம் முற்றுப்பெற்று விட்டது. இப்பொழுது இருவரும் எப்படி இணைந்து வாழ்க்கை நடத்துவது? இங்கே தான் குர்ஆனின் அற்புதத்தை விளங்க வேண்டும். இந்த இடத்தில் "ரஹ்மத்" இரக்கம் என்ற வார்த்தையை பயன்படுத்தி இருக்கிறது.

ரஹ்மத் என்றால் ஒருவருக்கொருவர் பரிவு காட்டுவது இரக்கம் காட்டுவது என்று பொருளாகும். அதாவது முதுமையடையும் போது கணவன் யோசிக்க கடமைப்பட்டுள்ளான்.தன் இளமையை எனக்காக கொடுத்து என் குழந்தைகளை வளர்ப்பதிலும் எனக்கு பணிவிடை செய்வதிலும் தன் வாலிபத்தை அழித்துக் கொண்ட என் மனைவி இன்று வயோதிகத்தில் நோயாளியாகி விட்டாள்: இன்று அவளின் தேவை எனக்கில்லை என்றாலும் அவளுக்கு பரிவு காட்டவும் உதவி செய்யவும் ஒரு துணை தேவை. எனவே அவள் நிலைமைகளின் மீது இரக்கப்பட்டு அவளுடன் சேர்ந்து வாழவேண்டியது என் கடமை என்று எண்ண வேண்டும்.

இதே போன்று மனைவியும் சிந்திக்க வேண்டும் என் கணவர் தனது வாலிபத்தை எனக்காக என் குழந்தைகளுக்காகவே கழித்தார். இப்பொழுது அவர் வியாதிகளின் சங்கமமாகிவிட்டார். இந்த நேரத்தில் அவர் மீது இரக்கப்பட்டு அவருக்கு பணிவிடை செய்ய வேண்டியது என் கடமை என்று எண்ண வேண்டும்.

இந்த இரக்கம், பரிவு, பாசம் ஒருவருக்கொருவர் மிகைக்கும் போது முதுமையில் இல்லற வாழ்க்கை இன்பமாக அமையும். முதுமையில் மனிதனுக்கு மறதி ஏற்படுகிறது. பதட்டமும் கோபமும் அதிகரிக்கின்றன. அச்சமயம் பரஸ்பரம் இரக்கம் காட்டும் போது குறைகளை மறைப்பதும் மன்னிப்பதும் இருவருக்கும் இலகுவாகி விடுகிறது.

இஸ்லாத்தின் அழகைப் பாருங்கள். இல்லற வாழ்க்கையின் இன்பத்தை இரண்டே வார்த்தைகளில் கூறிவிட்டது. (1) மவத்தத் – பிரியம் இது வாலிப காலத்துடன் சம்பந்தப்பட்டது. (2) ரஹ்மத் – இரக்கம் இது வயோதிகத்திற்கு சம்பந்தமானது. நாம் நமது இஸ்லாத்தின் போதனைகளை நமது வாழ்க்கையின் கலங்கரை விளக்காக்கி இம்மை, மறுமையின் சந்தோஷத்தைப் பெற்றுக் கொள்ள வேண்டும்.

**மனைவியின் மூன்று அடிப்படைத் தேவைகள்**

கணவன்மார்கள் இந்த விஷயத்தை நன்கு கவனத்தில் கொள்ள வேண்டும். உலகிலுள்ள ஒவ்வொரு பெண்ணுக்கும் இல்லற வாழ்க்கையில் மூன்று அடிப்படை தேவைகள் இருக்கின்றன. அனைத்து பெண்களும் அம்மூன்றையும் தேடுவார்கள்.

1) பாதுகாப்பு – PROTECTION

2) கவனிப்பு – ATTENTOIN

3) பாராட்டு– APPRECIATION

**1) பாதுகாப்பு – PROTECTION**

'பெண்ணுக்கு முதல் தேவை அவளுடைய பாதுகாப்பு. அவள் கணவனுக்காக தன் வீட்டை விட்டு வந்திருக்கிறாள். அவள் வந்திருக்கும் இந்த இடத்தில் அவளுக்கும் அவளது உயிருக்கும் அவளது கண்ணியத்திற்கும் அவளது ஈமானுக்கும் பாதுகாப்பு தேவை.

**முதல் பாதுகாப்பு :** அந்த பெண் தன் குழந்தைகளுடன் சேர்ந்து வாழ பாதுகாப்பான ஓர் இடம் தேவை. அவ்வீட்டில் அவளது கணவன் அவளை பாதுகாக்க வேண்டும். இது அவளது இயற்கை தேவை. இங்கு பாதுகாப்பில்லை என்று அவள் பயப்படுகின்ற ஓர் இடத்தில் கணவன் அவளை வைத்தால் அந்த குடும்பம் செழிக்காது.

**இரண்டாவது பாதுகாப்பு :** கணவன் தன் மனைவியை அவளது நல்ல, கெட்ட எல்லா குணங்களுடனும் அவளை தன்னுடையவளாக ஆக்கிக் கொள்ள வேண்டும். ஏனென்றால் அவளும் ஒரு மனிதப்பிறவி தான். அவளில் சில நன்மைகள் இருக்கும் போது சில தீமைகளும் இருக்கும். கணவன் அவளது நல்ல விஷயங்களுக்கும் பொறுப்பானவன் அவளது தீய காரியங்களுக்கும் பொறுப்பானவன். நீ எனக்காக இங்கே வந்திருக்கிறாய்

இப்பொழுது உனது நன்மை, தீமைகள் அனைத்திற்கும் நான் பொறுப்பாளியாக இருக்கிறேன் என்று ஆறுதல் கூற வேண்டும்.

நன்மைகள் ஏற்பட்டால் சரி என நான் ஏற்றுக் கொள்கிறேன். ஆனால் சிறிய தவறு ஏற்பட்டாலும் நான் உன்னை கெட்டுப் போன பொருள்களைப் போல சுருட்டி வீசிவிடுவேன் என்றிருக்கக் கூடாது. அப்படி இருந்தால் அவளுக்கு பாதுகாப்பு உணர்வே ஏற்படாது. என் கணவர் என்னுடைய நலவுகளை ஏற்றுக்கொள்வார் என் மூலம் ஏதேனும் தவறுகள் ஏற்பட்டு விட்டாலும் அவரது சகிப்புத் தன்மையால் எனது அந்த குறையை ஏற்று சரி செய்வார் என்ற நம்பிக்கை அவளுக்கு ஏற்பட வேண்டும். அந்தளவு மனைவிக்கு பிரியத்தையும் வழங்க வேண்டும்.

ஒரு பெண் தன் கணவரைப் பற்றி இவர் தான் எனக்கு உற்ற துணை, என் வாழ்க்கையின் உதவிக்கரம், அல்லாஹுதஆலா, மேலே வானத்தின் முகடையும் அதற்குக் கீழே என் கணவனின் வீட்டின் முகடையும் என் பாதுகாப்பிற்காக வழங்கியுள்ளான் என்று உணரும் பொழுது அப்பெண்ணிடமிருந்து (FEAR OF UNKNOWN) அவளை அறியாமல் ஏற்படும் பயம் வெளியேறுகிறது. நாளை என்ன நடக்கும்? என் வருங்காலம் என்னவாகும்? என்ற பயம் அவள் மனதை விட்டும் அகன்று விடுகிறது. அவள் வீட்டில் நிம்மதியாக வாழ்கிறாள்.

எனவே இல்லற வாழ்வில் பெண்ணுக்குக் கிடைக்க வேண்டியவற்றில் மிக முக்கியமானது பாதுகாப்பு. அதை தன் மனைவிக்கு ஏற்படுத்தித் தர வேண்டியது கணவனின் கடமை.

**2) கவனிப்பு – ATTENTION**

மணவாழ்வில் பெண்ணிற்கு கிடைக்க வேண்டிய முக்கிய தேவை கணவனின் கவனிப்பு. அதாவது கணவன் தன் மனைவிக்கு நேரம் கொடுக்க வேண்டும். அவளது நிலைமைகளை விசாரித்து அவளது தேவைகளைப் புரிந்து நிறைவேற்ற வேண்டும்.

கணவன் தன் அலுவலக வேலைகளில் மூழ்கிவிட்டான். மனைவி வீட்டில் பல நாட்களாக நோயாளியாக இருக்கிறாள். அவளை விசாரிப்பதற்கும் அவளை டாக்டரிடம் அழைத்துச் செல்வதற்கும் கூட இவருக்கு நேரமில்லை என்ற நிலை இருக்கக்கூடாது. என் கணவர் என்னை கவனிப்பதில்லை, என்

தேவைகளை புரிந்து கொள்வதில்லை என்று ஒரு பெண் உணர ஆரம்பித்துவிட்டால் அவள் ஒரு பொழுதும் மகிழ்ச்சியாக வாழ்க்கையைக் கழிக்க முடியாது. எனவே தன் மனைவியை கவனித்துக் கொள்வதும் கணவனின் கடமைகளில் ஒன்றாகும்.

கணவன் வீட்டில் வந்து நேரத்தை கழிக்கிறான். ஆனால் அந்த நேரம் முழுவதையும் சண்டையிடுவதில் கழிக்கிறான் என்றால் இதற்கு கவனிப்பு என்று பெயரில்லை. இது இருவரையும் நிம்மதி இழக்கச் செய்து விடும். கவனிப்பு என்றால் அதன் மூலம் மனைவிக்கு திருப்தி கிடைக்க வேண்டும். மன நிம்மதியும் தாம்பத்திய திருப்தியும் இப்படியாக அனைத்து திருப்தியும் கிடைக்க வேண்டும்.

**பெண்ணின் ஏக்கம்**

ஒரு பெண் வாழ்க்கையின் பல விஷயங்களை தன் கணவனுடன் பகிர்ந்து கொள்ள நினைப்பாள். ஆனால் கணவன் தனது அலுவலகத்தில் அல்லது வியாபாரத்தில் மூழ்கி இருக்கிறான். அவன் வந்தவுடன் பேசலாம் என்று பல விஷயங்களை சிந்தித்துக் கொண்டிருக்கிறாள். இந்நேரத்தில் கணவன் வந்து சாப்பிட்டுவிட்டு தூங்கி விட்டான். மனைவியிடம் ஒரிரு வார்த்தைகள் கூட பேசவில்லை என்றால் அவளுக்கு குடும்பவியல் உதவிகள் எப்படி கிடைக்கும்.

ஒரு பெண் தன் சுக, துக்கங்களை பகிர்ந்து கொள்ள, தேவைகளை கேட்டுப் பெற சந்தர்ப்பம் தேவை. அதற்குரிய அவகாசத்தை கணவன் மனைவிக்கு வழங்க வேண்டும். அதைத் தான் "கவனிப்பு" என்கிறோம். பொதுவாக நாம் பார்க்கிறோம் கணவன் வெளியிலிருந்து வருகிறான். மனைவி அவனுக்காக உணவுகளை தயார் செய்து தன்னை அலங்கரித்து அமர்ந்திருக்கிறாள். அவன் தன் வியாபார பிரச்சனைகளால் மன இறுக்கத்துடன் வருகிறான். எனக்கு சாப்பாடு வேண்டாம் நான் தூங்க வேண்டும் என்று தூங்கி விடுகிறான் என்றால் அந்த அபலைப் பெண்ணின் நிலையை சற்று சிந்தித்து பாருங்கள். கணவன் அவளை கவனிப்பதில்லை என்றால் அவளது மாமனார், மாமியார் மற்ற உறவினர்கள் எவ்வளவு பிரியமாக இருந்தாலும் வீடு எவ்வளவு வசதியாக இருந்தாலும் அவளால் சந்தோஷமாக இருக்க முடியாது.

இன்னும் பல இடங்களில் ஒரு பெண் தன் நெருங்கிய உறவினர்களின் வீடுகளிலேயே வாழச் செல்கிறாள். அனைவரும் அவளிடம் நல்ல முறையில் நடந்து கொள்கின்றனர். ஆனால் அவளது கணவன் தீய பழக்கங்களுக்கு அடிமையாகி விட்டான். மதியிழந்து நிற்கிறான். இந்த பெண்ணுக்கு எப்பொழுதும் நிம்மதியே கிடைக்காது. அவள் யாருக்காக இங்கே வந்தாளோ அவனின் கவனிப்பு கிடைக்க வில்லை என்றால் நிம்மதி எங்கே கிடைக்கும். எனவே கணவன் தன் மனைவிக்காக நேரம் கொடுத்து அவளது சுக, துக்கங்களில் பங்கு கொள்ள வேண்டும். அவளை கவனித்துக் கொள்ள வேண்டும். இது அவளது இயற்கை தேவைகளில் ஒன்று.

**3) பாராட்டுதல் – APPRECIATION**

ஒரு பெண் தன் கணவனிடம் எதிர்பார்க்கும் மூன்றாவது விஷயம். அவள் தன் கணவனுக்காக அவனது சொல்லுக்கு கட்டுப்பட்டு எல்லா வேலைகளையும் செய்கிறாள். எனவே என் நல்ல வேலைகளுக்கு என் கணவர் "சபாஷ்" கூற வேண்டும். என்னைப் பாராட்ட வேண்டும் என் செயல்களுக்கு மதிப்பளிக்க வேண்டும் என்று விரும்புகிறாள்.

மனைவி கணவனுக்காக நல்ல நல்ல வேலைகளை சிரமப்பட்டு செய்கிறாள். ஆனால் கணவன் அதைப் பொருட்படுத்தவே இல்லை. கண்டு கொள்ளாமல் இருக்கிறான். அதே போல் அவள் அவனுக்காக பல வகை உணவுகளை தயார் செய்கிறாள். அவனும் சாப்பிட்டான். ஆனால் அவளைப் பாராட்டி, மதிப்பளித்து ஒரிரு வார்த்தைகள் கூட கூறவில்லை என்றால் அவள் உள்ளம் உடைந்து விடும்.

மனிதன் புகழ்ச்சியை விரும்புபவன். இது அவனது இயற்கை சுபாவம். அவன் நல்ல காரியம் செய்தால் பாராட்ட வேண்டும். யாரும் பாராட்டவில்லை என்றால் அவனது உள்ளம் உடைந்து விடும். இது இயற்கை. எனவே கணவனும் தன் மனைவியின் செயல்களுக்கு மதிப்பளித்து அவளை பாராட்டி ஆர்வமூட்ட வேண்டும்.

கணவன் தன் மனைவியின் இம்மூன்று தேவைகளையும் பூர்த்தி செய்ய வேண்டும். இன்று பார்க்க அறிவு இல்லாத காரணத்தால் ஆண்களின் புறத்தில் பல குறைபாடுகள், தவறுகள் ஏற்படுகின்றன. மேலும் கணவன் செய்யும் அபாயகரமான 10 தவறுகளை சுட்டிக் காட்ட விரும்புகிறேன்.

பெரும்பாலான ஆண்கள் அந்தத் தவறுகளை செய்து வீட்டின் அமைதியை தொலைத்து விடுகின்றனர். எனவே ஆண்கள் உள்ளத்தின் காதால் கேட்டு மனதின் ஆழத்தில் பதிய வைத்துக் கொள்ள வேண்டும்.

**1) மனைவியை கண்டு கொள்ளாமல் இருத்தல்**

இன்று கணவன் செய்யக்கூடிய முதல் தவறு மனைவியை கண்டுகொள்ளாமல் விடுவது தான். அவளுக்காக நேரம் கொடுப்பதில்லை. சபையில் அமர்ந்தால் அனைவரையும் கவனிப்பார்கள். ஆனால் மனைவியின் பக்கம் மட்டும் கவனம் செலுத்த மாட்டார்கள். உறவுமுறைப் பெண்கள் வந்து விட்டால் அவர்களுடன் மகிழ்ச்சியாக பேசுவார்கள். ஆனால் கரம்பிடித்த மனைவியிடம் பேசுவதற்கு நேரம் கிடைக்காது.

சிலர் தாமதமாக வீட்டிற்கு வருவார்கள் வந்தவுடன் அந்த வேலை இந்த வேலை என இழுத்துப் போட்டு செய்வார்கள். இவ்வாறு மனைவியை புறக்கணிப்பது பெரிய தவறு. இதன் தீய விளைவுகளை நமது சமுதாயம் கண்டுகொண்டு தான் இருக்கிறது. இவளை திருமணம் செய்தாகி விட்டது. அவள் மனைவியாகி விட்டாள். இப்பொழுது இவளைக் கவனிப்பதற்கும் அன்பு செலுத்துவதற்கும் என்ன தேவையிருக்கிறது என்று கணவன் நினைக்கிறான்.

**மனைவி புத்தகமா? டைரியா?**

கணவன் வீட்டில் அமர்ந்து பல மணி நேரமாக புத்தகங்களைப் புரட்டிக் கொண்டிருந்தான். மனைவி அப்பாவியாக "நம்மையும் ஒரு முறையாவது பிரியமாக பார்க்க மாட்டானா" என்று சுற்றிச் சுற்றி வந்தாள். ஆனால் கணவன் அவளைத் திரும்பிக் கூட பார்க்கவில்லை. தூங்கும் நேரம் நெருங்கியது. அவளது கண்கள் செருக ஆரம்பித்தன. அப்பொழுது கணவனுக்கு அருகில் வந்து நானும் ஒரு புத்தகமாக இருந்திருக்கக் கூடாதா? இவ்வளவு நேரம் என்னையும் பார்த்திருப்பீர்களே என்று கூறினாள். அதற்கு கணவன், ஆமாம் நீ ஒரு டைரியாக இருந்திருக்கலாம். ஒவ்வொரு வருடமும் மாற்றியிருப்பேனே என்று பதிலளித்தான். கணவனின் சிந்தனை இப்படி இருந்தால் மனைவி எப்படி நிம்மதியாக இருக்க முடியும். மற்றவர்களுடன் அன்பாக பேசுவது போன்று இல்லை. அதைவிட அதிகமான பிரியத்துடன் மனைவியிடம் பேச வேண்டும். என் உள்ளத்தில் உனக்கு பெரிய இடம் இருக்கிறது. நீ என்னை ஆட்கொண்டு விட்டவள் என்பதை அவளுக்கு உணர்த்த வேண்டும். அப்பொழுது அவளுக்கு முழுமையான நிம்மதி கிடைக்கும்.

சிலர் பேசும்போது 'நான் என் மனைவியை எப்போழுதும் மதிப்பதே கிடையாது' என்று கூறுகின்றனர். இது எவ்வளவு பெரிய மடத்தனம். அவர் ஷரீஅத்தை விளங்கவே இல்லை. ஷரீஅத்தின் காற்று கூட அவர் மீது வீசவே இல்லை என்று நினைக்கிறேன். எனவே தான் மனைவியை கண்டு கொள்வதே இல்லை என்று தன் வாயினால் கூறுகிறார்கள்.

**2) தலாக் மிரட்டல்**

இரண்டாவது பெரிய தவறு மனைவியின் கழுத்தில் எப்பொழுதும் தலாக் என்ற கத்தியை வைத்து மிரட்டுவது. ஏதாவது சிறிய விஷயம் நடந்துவிட்டால் உடனே உன்னை தீர்த்து விடுவேன். உன் அம்மா வீட்டிற்கு அனுப்பிவிடுவேன். என்ன நினைத்துக் கொண்டாய். எனக்கு எத்தனை பெண் கிடைக்கும் தெரியுமா? என்று கூறுவது.

ஒரு கணவன் தன் மனைவியை தலாக் என்ற ஆயுதத்தால் மிரட்டி வந்தால் அவளால் நிம்மதியாக இருக்க முடியுமா? கணவன் 'உன்னை தலாக் சொல்லி விடுவேன்' என்று ஒரு முறை சாதாரணமாக சொல்லி விடுகிறான். இந்த வார்த்தையால் அந்த பூவுக்குள் பூகம்பத்தை ஏற்படுத்தி விட்டோம் என்று யோசிப்பதில்லை, இந்நிலையில் அவள் தன்னை நாதியற்றவளாக உணர்கிறாள். இவர் என்னை விட்டு விட்டால் என் வாழ்க்கை என்னவாகும் என்று சிந்திக்க ஆரம்பிக்கிறாள்.

இப்பொழுது அவளது கவனம் பெற்றோரின் பக்கம் திரும்புகிறது. அனைத்து விஷயங்களிலும் அவர்களையே நம்புகிறாள். இவர் துரத்திவிட்டால் கடைசியில் அங்கே தானே போக வேண்டும் என்ற எண்ணம் வருகிறது. கணவனிடம் அவளுக்கு பாதுகாப்பு உணர்வு இல்லாமல் போய் விடுகிறது.

சில பெண்கள் கணவன் என்னைக் கைவிட்டால் பிறந்த வீட்டிற்கும் செல்ல முடியாது என்னை நானே சமாளிக்க வேண்டும். எனவே ஏதாவது வேலை தேடிக் கொள்ளலாம் என்று நினைக்கின்றனர். அங்கே ஷைத்தான் அவர்களுக்கு வலை விரிக்கின்றான்.

**பாவங்களின் தலைவாசல்:**

பேச்சுக்குப் பேச்சு "தலாக்" என்று மிரட்டுகிறவர்களின் மனைவிமார்கள் தீன்தாரிகளாக இல்லை என்றால் அன்னிய ஆண்களைத் தேட ஆரம்பித்து விடுகிறார்கள் என்பதை அனுபவத்தில் பார்க்கிறோம். உன்

கணவனை நம்பாதே அவன் எப்பொழுது உன்னை கழட்டிவிடுவான் என்று தெரியாது உன்னால் பிறந்த வீட்டிற்கும் செல்ல முடியாது. எனவே உனக்கொரு நல்ல துணையை இப்பொழுதே தேர்ந்தெடுத்துக்கொள் என்று ஷைத்தான் அவர்களுக்கு உபதேசம் செய்கிறான். பிறகு அவர்களுக்கு பாவம். பாவமாக தெரிவதில்லை. இந்த பெண்களுக்கு பாவத்தின் வாசல்கள் திறக்கப்படுகின்றன. எனவே ஆண்கள் தான் புத்திசாலிகளாக நடந்து கொள்ள வேண்டும்! இது போன்ற வார்த்தைகளை எப்பொழுதும் பயன்படுத்தக் கூடாது.

நீங்கள் அவளுக்கு ஆறுதல் கூறி சந்தோஷமாக வைத்தால் அவள் உங்கள் இல்லத்தைப் பூங்காவாக்குவாள். அடிக்கடி "தலாக்" என்று மிரட்டுவதால் அவளுக்குள்ளே இனம்புரியாத பயம் உண்டாகிறது. அந்த வார்த்தை அவளுக்குள் இடியாக இறங்குகிறது. பிறகு அவள் கணவனின் நம்பிக்கைக்குரியவளாக வாழமாட்டாள்.

**தலாக் ஒரு வெறுப்பான செயல்:**

அல்லாஹுதஆலா ஆகுமாக்கிய காரியங்கள் அனைத்திலும் அவனுக்கு மிகவும் வெறுப்பானது "தலாக்" தான் என்று ஹதீஸில் வந்துள்ளது. மார்க்கம் அதனை விரும்பவில்லை. ஆம்! நிர்ப்பந்தமான சூழ்நிலையில் தலாக் சொல்வது தான் பிரச்சனைக்கு தீர்வு என்ற அவசியம் ஏற்பட்டால் தலாக் கூறுவதற்கு மார்க்கம் அனுமதித்தாலும் அதனை விரும்பவில்லை. எனவே ஆண்கள் தலாக் என்ற வார்த்தையை நாவிலிருந்து வெளிப்படுத்தாதீர்கள்.

**எனது அனுபவம்:**

ஒரு தம்பதியை சந்தித்தேன். இருவரும் படித்தவர்கள். இளம் வயதுடையவர்கள். மார்க்கப் பற்றுடையவர்கள். ஆனாலும் இருவரின் இல்லற வாழ்வில் சந்தோஷமில்லை. திருமணம் முடிந்து ஏழு வருடங்கள் ஆகிவிட்டன. ஏழு வருடங்களில் ஒரு நாள் கூட நிம்மதியில்லை. மனைவி கடிதத்தின் மூலமாகவும் கணவன் நேரடியாகவும் நிலைமையை எனக்கு எடுத்துக் கூறினார். இருவரைப் பற்றியும் விசாரித்தபோது கணவன், பிரச்சனைகள் வரும் போது 'என் பேச்சைக் கேட்கவில்லை என்றால் உன்னை தலாக் சொல்லி விடுவேன்' என்று மிரட்டுவார். இதனால் நம்பிக்கை இழந்த மனைவி அவருடன் சண்டையிட்டு வந்தாள் என்று தெரிந்தது.

இருவரையும் ஒரு நாள் அழைத்து மனைவியை திரைக்குப் பின்னால் அமர வைத்து " உங்கள் இல்லற வாழ்க்கை சொர்க்கப் பூங்காவாக ஒரு வழி சொல்வேன். அதன்படி செயல்படுவீர்களா?" என்று கேட்டேன். இருவரும் ஆமோதித்தனர். "எந்த ஒரு பிரச்சனை வந்தாலும் என்னிடம் வந்து ஆலோசனை செய்து நான் சரி என்று கூறாமல் உன் மனைவியை நீர் தலாக் சொல்லக் கூடாது. இந்த வாக்குறுதி மட்டும் செய்து தந்தால் உங்கள் வாழ்க்கை சந்தோஷமாகிவிடும் என்றேன். அவரும் வாக்குறுதி அளித்துச் சென்றார். பிறகு அவ்விருவருக்கும் சண்டையே வரவில்லை. இனி இவர் ஹள்ரத்துடைய அனுமதியின்றி என்னை விட்டு விலக மாட்டார் என்று அந்த மனைவிக்கு ஒரு நம்பிக்கை பிறந்து விட்டது. எனவே அவள் கணவனுடன் அன்பாக வாழ ஆரம்பித்துவிட்டாள்.

**பிரச்சனைக்கு முதல் கட்ட தீர்வு, தலாக் அல்ல.**

பிரச்சனைகள் ஏற்படும் போது அவற்றிற்கு தீர்வு காண பல வழிகள் உள்ளன. தலாக் தீர்வு காணும் வழியல்ல. எனவே மனைவிக்கு புரிய வைத்து திர்வு காண வேறு வழிகளை தேர்ந்தெடுக்க வேண்டும். புனித குர்ஆன் மனைவியின் தவறுகளை சீர் படுத்தும் வழிகளை நமக்கு அழகாக கூறுகிறது. அவற்றில் முதலாம் வழி அவளிடம் பேச வேண்டாம். பேச்சைக் குறைத்துக் கொள்ளுங்கள்! பேச்சு குறையும் போது அவள் உன்னை சமாதானம் செய்ய முற்படுவாள். தவறை உணர்ந்து விட்டுவிடுவாள் என்பது தெளிவான விஷயம்.

அதிலும் சரிப்படவில்லை என்றால் இரண்டாவது நடவடிக்கையாக وَاهْجُرُوهُنَّ فِي الْمَضَاجِعِ நீங்கள் உங்கள் படுக்கையை பிரித்துவிடுங்கள். அப்பொழுது என் மீது அவர் உண்மையிலேயே கோபமாக இருக்கிறார் என்று புரிந்து கொள்வாள். இத்தனை வழிகளை கூறும்போது குர்ஆன் அந்த இடத்தில் தலாக் என்ற வார்த்தையை கூட பயன்படுத்தவில்லை. ஏனெனில் அவளுக்கு புரிய வைக்க வேறுவழிகளை பயன்படுத்த வேண்டும் என்று தான் மார்க்கம் விரும்புகிறது.

அதே நேரத்தில் அவள் ஒரு பெரிய தவறு செய்து விட்டால் அவளை அடிக்க நீங்கள் விரும்பினாலும் மார்க்கம் உங்களுக்கு சிறிது அனுமதி வழங்குகிறது. ஆனால் அதற்கும் வரம்புகள் உள்ளன. அதற்காக உணவில் உப்பு கூடிவிட்டது என்பதற்கெல்லாம் கை ஓங்கி விடக் கூடாது. இந்த அனுமதி,

குணம் சரியில்லாத பெண்ணுக்குத்தான். அதுவும் முதலில் உபதேசம் செய்யுங்கள். பிறகு வெறுப்பைக் காட்டுங்கள். பிறகும் விளங்க வில்லை என்றால் படுக்கையை ஒதுக்குங்கள் அதிலும் திருந்த வில்லை என்றால் (இரண்டு மூன்று) அடிகள் (முதுகில்) கொடுங்கள். (அல்குர்ஆன் 4:34) ஆனால் முகத்தில் அடிக்காதீர்கள்.

பாருங்கள்! இஸ்லாம் மனைவியை அடிக்கச் சொல்கிறது என்று நண்பர் ஒருவர் அங்கலாய்த்தார். எந்த நிலையில் மார்க்கம் அடிக்கச் சொல்கிறது என்று கேட்டேன். ஒரு பெரிய குற்றம் செய்து விட்டால் அடிக்கச் சொல்கிறது என்றார். ஆமாம் அவள் அப்படி தவறு செய்து விட்டு வருவாள். வீட்டில் கணவன் "வாம்மா என்ன நல்ல காரியம் செய்திருக்கிறாய்" என்று இனிப்பு ஊட்டி விடுவானா! என்று கேட்டேன். புரியவைத்தும் புரியவில்லை என்றால் ஆடும் மாட்டை ஆடித்தான் கறக்க வேண்டும். எனவே தான் இந்த கசப்பான சிகிச்சையை கொடுக்க வேண்டும் என்று நான் பதில் கூறினேன். ஆனால் பிரச்சனைக்குத் தீர்வாக குர்ஆனில் இந்த இடத்திலும் தலாக் என்ற வார்த்தை இல்லவே இல்லை. முதலில் பிரச்சனைகளுக்கு தீர்வைத் தேடுங்கள்! "தலாக்," பிரச்சனைகளுக்கு முதல் கட்ட தீர்வல்ல என்று இஸ்லாம் தீர்க்கமாக சொல்கிறது.

**தலாக்கின் சரியான முறை**

இறுதியில் தலாக் விடுவதைத் தவிர வேறு வழி இல்லை என்றால் (அல்லாஹ் பாதுகாப்பானாக) அதற்குரிய அழகிய முறையும் ஷரீஅத்தில் கூறப்பட்டுள்ளது. முதலில் உங்கள் தரப்பில் இருவரும் அவளுடைய தரப்பில் இருவரும் அமர்ந்து பேச்சு வார்த்தை நடத்த வேண்டும். அவர்களும் தலாக்கிற்கு செல்லாமல் சமாதானம் ஏற்படுத்த முடிந்த அளவு முயற்சி செய்ய வேண்டும். சமாதானத்திற்கு வழியே இல்லை என்று வரும்பொழுது கூட நல்ல முறையில் அவளைப் பிரித்திட வேண்டும் என்று தான் மார்க்கம் கூறுகிறது. (அல்குர்ஆன் 2:231)

**ஆக தலாக்கிற்கு முன்பும் பேச்சு வார்த்தை நடத்த வேண்டும். கடைசியில் இருவரும் சேர்ந்து வாழ முடியாத பட்சத்தில் தான் "தலாக்" சொல்ல வேண்டும். அதற்கு முன் மனைவியை திருத்த பல படித்தரங்கள் உள்ளன. எனவே பேச்சுக்குப் பேச்சு நான் தலாக் சொல்லிவிடுவேன் என்று மிரட்டுவது அடிமட்ட முட்டாள் தனம் என்பதை ஆண்கள் புரிந்து கொள்ள வேண்டும்.**

ஆண்கள் இவ்விஷயத்தில் பெரும் தவறு செய்து வருகிறார்கள். இந்த வார்த்தை ஒரு பெண்ணை எந்த அளவு பாதிக்கிறது. அதைக் கேட்டு ஷைத்தான் அவளுக்குள்ளே எத்தனை தீய எண்ணங்களை விதைக்கிறான். பாவங்களின் தலை வாசலைத் திறந்து விடுகிறான் என்பதை அவர்கள் விளங்குவதே இல்லை. கடைசியில் அவள் இல்லத்தில் ஒருவனோடும் உள்ளத்தில் மற்றொருவனோடும் வாழ ஆரம்பித்து விடுகிறாள். இது எவ்வளவு பெரிய பாவம்! எனவே கணவன் இவற்றிற்குக் காரணமான தலாக் மிரட்டலை ஒரு போதும் கையாளக் கூடாது.

**3) இரண்டாம் திருமண மிரட்டல்**

கணவன் செய்யும் மூன்றாவது பெரிய தவறு எதற்கெடுத்தாலும் மனைவியிடம் நீ அவ்வளவு அழகாக இல்லை. எனவே நான் வேறொரு பெண்ணை திருமணம் செய்யலாம் என்று நினைக்கிறேன் என்று மிரட்டுகிறான். இந்த இரண்டாம் திருமண மிரட்டலுக்கு என்ன அவசியம் ஏற்பட்டது? மார்க்கம் ஆணுக்கு நான்கு பெண்களை திருமணம் செய்ய அனுமதி வழங்கியிருக்கிறது. என்றாலும் ஒரே மனைவி கணவனின் தேவைகள் அனைத்தையும் பூர்த்தி செய்கிறாள் என்றிருக்கும் போது இந்த மனைவியை இரண்டாவது திருமணத்தை வைத்து மிரட்ட வேண்டும் என்ற குழப்பம் எதற்கு? தேவையில்லாமல் அவளது வாழ்க்கையையும் உங்கள் வாழ்க்கையையும் குழப்ப வேண்டிய அவசியமென்ன?

**நீதம் செலுத்துவது இலேசான காரியமா?**

மறந்து விடாதீர்கள் இரு மனைவிகளுக்கிடையே சமமாக நடப்பது கணவன் மீது கட்டாய கடமையாகும். ஆனால் அவ்வாறு சமமாக நடப்பது சிரமமான காரியம் என்று குர்ஆனே சாட்சி செல்கிறது. நீங்கள் எவ்வளவு தான் பேராசை கொண்டாலும் மனைவியர்களுக்கிடையே உங்களால் நீதமாக நடக்க முடியாது. (அந்நிஸா – 129) நீங்கள் பலவீனமானவர்கள் உங்களால் இவ்வளவு பெரிய சுமையை சுமக்க முடியாது என்று குர்ஆன் கூறிய பின்பு கியாமத் நாளில் அல்லாஹ்வின் சமூகத்தில் இவ்வளவு பெரிய சுமையுடன் எப்படி செல்வீர்கள்?

அது மட்டுமல்ல. ஓர் அடியானுக்கு இரு மனைவியர் இருந்து அவர்களுக்கிடையே அவன் நீதமாக நடந்து கொள்ளவில்லை என்றால் கியாமத் நாளில் ஒரு பக்கம் வாதம் அடித்த மனிதனைப் போல அல்லாஹ்வின் சமூகத்தில் நிற்பான் நான் என் மனைவியர்க்கிடையே

சமமாக நடந்து கொள்ளவில்லையே என்று கை சேதப்படுவான் என்று ஹதீஸில் வந்துள்ளது. சமமாக நடப்பது ஒரு பெரிய சவால் அதனை நம்மால் சமாளிக்க முடியாது என்றிருக்கும் போது அதை வைத்து மனைவியை மிரட்டுவது எவ்வளவு பெரிய தவறு.

**இன்றைய சூழ்நிலையில் ஒரு மனைவியை வைத்தே சமாளிக்க முடியவில்லை. இரண்டாவதைப் பற்றி ஏன் பேசுகிறீர்கள்? ஒருவனால் ஒரு கிலோவைக் கூட தூக்க முடியவில்லை. முதுகு வளைந்து விட்டது. நான் இன்னொரு கிலோவையும் தூக்கி விடுவேன் என்று அவன் சொன்னால் கேலிக்கூத்தாகி விடாதா? அவனது இடுப்பு ஒடிந்து விடுமல்லவா?**

***மறந்து விடாதீர்கள்! உங்களுக்கு இரண்டாவது மனைவி கிடைப்பாள் என்றால் உங்கள் மனைவிக்கும் அடுத்த கணவன் கிடைப்பான் அல்லவா? உங்களுக்கு நெற்றியடியாக உங்கள் மனைவி நானும் உன்னை விட்டுவிட்டு இரண்டாவது திருமணம் செய்து காட்டவா? என்று கேட்டால் என்ன பதில் சொல்வீர்கள். எனவே இரண்டாவதுதிருமண மிரட்டல் ஒரு மடத்தனம் என்பதை மறந்துவிடாதீர்கள்.***

**4) அவமரியாதை செய்தல்**

கணவன் செய்யும் நான்காவது பெரும் தவறு, கணவன் தன் மனைவியின் ஒரு தவறை மற்றவர்களுக்கு முன்னால் சொல்லி திருத்துகிறான். மற்றவர் முன்னிலையில் அவளை கிண்டல் செய்கிறான். அவளை மரியாதைக் குறைவாக நடத்துகிறான். இவ்வாறு செய்வதால் நீங்கள் நல்ல பெயர் வாங்கலாம். நீங்கள் கண்டிப்பானவர் என்பதை மற்றவருக்குக் காட்டிக் கொள்ளலாம். உங்கள் தாய் சகோதரிக்கு முன்னால் மனைவியை அதட்டுவதின் மூலம் என் மகன் வீட்டில் எவ்வளவு கட்டுப்பாடு வைத்துள்ளான் என்று தாயும், என் அண்ணன் மிகவும் கண்டிப்பானவர் என்று சகோதரியும் மெச்சுவார்கள். அவர்களின் பார்வையில் நீங்கள் ஹீரோவாக உயர்ந்து விடுவீர்கள். ஆனால் உங்கள் மனைவியின் பார்வையில் ஜீரோவாகி விடுவீர்கள்.

ஒவ்வொரு மனிதனுக்கும் சுயமரியாதை இருக்கிறது. ஒருவனின் சுயமரியாதை பாதிக்கும் போது அவனது உள்ளம் உடைகிறது. இது பெரும் பாவங்களில் ஒன்று. ஒரு சிறுவனை பலருக்கு முன்னால் அதட்டினால் அவனது

சுயமரியாதை கெடுவதால் அழ ஆரம்பித்துவிடுகிறான். அப்படியிருக்க தன் கௌரவத்தை பாதுகாக்க நினைக்கும் ஒரு பெண்ணை பலருக்கு முன் அவமானப்படுத்தலாமா? தனிமையில் அவளுக்கு உபதேசம் செய்யுங்கள். மக்களுக்கு முன்னால் அவளைப் புகழுங்கள். இதை வாழ்க்கைக் கலையாக கையாளுங்கள். தனிமையில் எவ்வளவு திட்டினாலும் தாங்கிக் கொள்வாள். ஆனால் மற்றவர்களுக்கு முன்னால் கேவலப்படுவதை தாங்கிக் கொள்ள மாட்டாள். அவள் உங்களின் வாழ்க்கைத் தோழி உங்களிருவருக்கும் தனிமையில் நேரம் கிடைக்கும். அப்பொழுது ஒருவர் மற்றவருக்கு புரிய வையுங்கள். பிறருக்கு முன்னால் அவளை கண்ணியக் குறைவாக நடத்தாதீர்கள்.

அறிஞர்கள் எழுதுகிறார்கள். குழந்தை தனிமையில் கீழே விழுந்து பெரிய காயம் ஏற்பட்டாலும் அழுவதில்லை. ஆனால் பிறருக்கு முன்னால் விழுந்து சிறிய அடிப்பட்டாலும் அழுகிறது. ஏனெனில் அங்கே அக்குழந்தையின் சுயமரியாதை காயப்பட்டுவிட்டது. அக்குழந்தை வலியால் அழவில்லை. சுயமரியாதை கெட்டதால் அழுகிறது. எனவே மனிதனின் சுயமரியாதையைக் கெடுக்கக் கூடாது.

**5) நேரம் கொடுக்காமல் இருத்தல்**

கணவனின் ஐந்தாவது பெரும் தவறு மனைவிக்கு நேரம் தருவதில்லை. நேரம் கிடைக்கும் போது அம்மாவிடம் உட்கார்ந்து பேசிக் கொண்டிருப்பார். இரவு 12 மணிக்கு தூக்கம் கண்களை கட்டிக் கொண்டு வரும் போது ரூமில் வந்து குப்புறப் படுத்துவிடுகிறார். மனைவியிடம் பேசவும் நேரமில்லை. அவள் உயிரோடு இருக்கிறாளா? இல்லையா? அவள் உடல் நிலை எப்படி இருக்கிறது? என்று கேட்கவுமில்லை. கணவன் மனைவிக்கு நேரம் கொடுக்க வேண்டும் என்பது மார்க்கத்தின் கட்டளையாகும். எனவே அதை நிறைவேற்றுங்கள்.

நண்பர்களுடன் உட்கார்ந்து அரட்டை அடித்துவிட்டு இரவு 12, 1 மணிக்கு வரும் பழக்கம் சில வாலிபர்களிடம் காணப்படுகிறது. சிலர் வீட்டிற்கு நேரத்திலே வந்து விட்டாலும் அண்ணன், தங்கை, தாய், தந்தையுடன் உட்கார்ந்து விடுகின்றனர். மனைவிக்கு நேரம் தருவதில்லை. கடைசியில் சண்டையில் முடிகிறது. ஏனெனில் இதுவும் (நேரம் ஒதுக்குவதும்) மனைவியின் அடிப்படைத் தேவைகளில் ஒன்று.

**நல்லவர்களின் தவறு**

பலர் நற்காரியங்களை காரணம் காட்டி மனைவிக்கு நேரம் ஒதுக்குவதில்லை. சிலர் நஃபிலான வணக்கங்கள் அல்லது தீனுடைய வேலைகளை மனைவிக்கு நேரமே கொடுக்க முடியாத அளவுக்கு தன் மீது இழுத்துப் போட்டுக் கொள்கின்றனர். இவர்கள் நல்லவர்கள், இறையச்சம் (தக்வா) உடையவர்கள் தாம். ஆனாலும் பெரும் தவறு செய்துவிடுகின்றனர். மனைவிக்கு நேரம் கொடுக்காததின் விளைவாக இவர்களின் இல்லற வாழ்க்கை களையிழந்து காணப்படுகிறது. அதற்காக தீனுடைய வேலைகள் செய்யக் கூடாது என்பதல்ல. அதற்கு நேரம் ஒதுக்குவது போன்று மனைவிக்கும் நேரம் கொடுக்க வேண்டும். ஏனெனில் அதுவும் தீனுடைய காரியம் தான்.

**உமர் (ரலி) யிடம் ஒரு பெண்மணி...**

ஒரு தடவை அமீருல் முஃமினீன் ஹள்ரத் உமர் (ரலி) அவர்களிடம் ஒரு பெண் வந்து தன் கணவரைப் புகழ ஆரம்பித்தாள். என் கணவர் மிகவும் நல்லவர், பகலெல்லாம் நோன்பு வைத்து இரவு முழுவதையும் தொழுகையிலும் குர்ஆன் ஓதுவதிலும் கழிப்பார் என்றார். சிறிது நேரம் இடைவெளிக்குப் பிறகு இதே வார்த்தைகளை இரண்டு, மூன்று முறை கூறினார். ஹள்ரத் உமர் (ரலி) அவர்களுக்கு இப்பெண் தன் கணவரை இவ்வளவு புகழ்கிறாளே என்று ஒரே ஆச்சரியம். ஆனால் அவர்களுக்கு அவ்வார்த்தைகளின் உட்கருத்து புரியவில்லை. அப்பொழுது உடனிருந்த ஹள்ரத் உபை இப்னு கஃப் (ரலி) அவர்கள், அமீருல் முஃமினீன் அவர்களே! இப்பெண் மிக அழகிய வார்த்தைகளால் தன் கணவரின் தவறை சுட்டிக்காட்டி அவருக்கு உபதேசிக்குமாறு உங்களிடம் கேட்கிறார் என்றார்கள். ஹள்ரத் உமர் (ரலி) அவர்கள் இவளது கணவர் நல்லவராக தெரிகிறாரே அவர் என்ன தவறு செய்கிறார் என்று கேட்டார்கள்.

அப்பெண்ணும் அதைத் தான் கூறுகிறார். அவரது கணவர் பகல் முழுவதும் நோன்பு வைத்து இரவு முழுவதையும் இபாதத்தில் கழிக்கிறார். ஆனால் மனைவிக்கு நேரம் ஒதுக்குவதில்லையே என்று உபை (ரலி) கூறினார்கள். அப்பொழுது தான் உமர் (ரலி) அவர்கள் சிந்திக்கலானார்கள். பிறகு அப்பெண்ணின் கணவரை அழைத்தார்கள். அவர் ஒரு ஸஹாபி. மிகவும் நல்ல மனிதர். அல்லாஹ்வின் நேசத்தால் இரவு பகலாக இபாதத் செய்து

வந்தார். ஹள்ரத் உமர் (ரலி) அவர்கள், ஹள்ரத் உபை (ரலி) அவர்களிடம் நீங்கள் தானே இந்த பிரச்சனையை கண்டுபிடித்தீர்கள் நீங்களே தீர்ப்பும் சொல்லுங்கள் என்று கூறினார்கள்.

**நான்கு நாட்களுக்கு ஒருமுறையாவது...**

உடனே ஹள்ரத் உபை (ரலி) அந்த ஸஹாபியிடம் மனைவிக்கு நேரம் கொடுக்க வேண்டும் என மார்க்கம் கட்டளையிடுகிறது. எனவே நீங்கள் அவளுக்கு நேரம் ஒதுக்க வேண்டும் குறைந்த பட்சம் நீங்கள் மூன்று நாட்கள் நோன்பு வைத்தால் நான்காவது நாளில் நோன்பை விட்டுவிட்டு மனைவிக்கு நேரம் கொடுக்க வேண்டும் என்று கூறினார்கள். அவரும் சரி என்று ஏற்றுக் கொண்டார். நான்கு நாட்களுக்கு ஒரு நாள் எனக்கு கிடைக்கும் என்ற சந்தோஷத்தில் அப்பெண்ணும் சென்று விட்டாள். ஆனால் ஹள்ரத் உமர் (ரலி) அவர்கள் இந்த மூன்று நாட்கள் என்ற நிபந்தனையை எப்படி ஏற்படுத்தினீர்கள் என்று கேட்டார்கள். நான் குர்ஆனைப் பார்த்து கூறினேன். குர்ஆனில் ஓர் ஆணுக்கு அதிகபட்சமாக 4 பெண்களை திருமணம் செய்யும் அனுமதி இருக்கிறது. ஒருவருக்கு நான்கு மனைவிகள் இருந்தால் மூன்று நாட்களுக்குப் பிறகு நான்காவது இரவு ஒரு பெண்ணுக்குக் கிடைக்கும். எனவே தான் நீங்கள் மூன்று நாட்கள் நோன்பு வைத்து நான்காவது நாளை மனைவியுடன் கழிக்க வேண்டுமென கூறினேன் என்று ஹள்ரத் உபை இப்னு கஃப் (ரலி) விளக்கம் கூறினார்கள். இப்படி பலர் நற்காரியங்களை முன் வைத்து மனைவிக்கு நேரம் கொடுக்க தவறி விடுகின்றனர்.

**சம்பாதிக்கச் செல்பவர்களின் தவறு**

பலர் சம்பாதிக்கும் நோக்கத்தில் கடல் கடந்து சென்று விடுகின்றனர். நீண்ட காலமாக திரும்புவதில்லை. இவர்களால் மனைவிக்கு நேரம் கொடுக்க முடிவதில்லை. ஒரு நாள் இரவில் ஹள்ரத் உமர் (ரலி) வீதியில் சென்று கொண்டிருந்தார்கள். ஒரு வீட்டிலிருந்து கவிதைகள் பாடும் சப்தம் கேட்டது. அக்கவிதைகளில் தன் கணவரைப் பிரிந்து வாழும் ஓர் இளம் பெண்ணின் ஏக்கம் நிரம்பி இருந்தது. உடனே ஹள்ரத் உமர் (ரலி) தன் மகள் ஹள்ரத் ஹஃப்ஸா (ரலி) அவர்களிடம் வந்து ஒரு பெண் தன் கணவரைப் பிரிந்து எவ்வளவு காலம் இருக்க முடியும் என்று கேட்டார்கள். அல்லாஹுதஆலா பெண்ணின் இத்தாவிற்கு நிர்ணயித்திருக்கும் காலம் அதாவது 4 மாதங்கள் 10 நாட்கள் ஒரு பெண் தன் கணவரைப் பிரிந்திருப்பாள் என்று ஹள்ரத் ஹஃப்ஸா (ரலி) பதிலளித்தார்கள்.

**நான்கு மாதங்களுக்கு மேல் கூடாது..?**

உடனே ஹள்ரத் உமர் (ரலி) ஒரு சட்டம் பிறப்பித்தார்கள். அல்லாஹ்வின் பாதையில் புனிதப் போருக்குச் செல்லும் ஒவ்வொரு முஜாஹிதும் கடைசி பட்சமாக 4 மாதங்களுக்குள் தன் இல்லம் திரும்ப வேண்டும். தன் மனைவியின் உள்ளம் குளிர அவளுடன் இருக்க வேண்டும்.

சிந்தித்துப் பாருங்கள்! இந்த உம்மத்திற்கே தாயாக இருக்கும் ஹள்ரத் ஹஃப்ஸா (ரலி) அவர்களே ஒரு பெண் அதிகபட்சம் 4 மாதங்கள் தான் தனியாக இருக்க முடியும் என்று கூறுகிறார்கள். அப்படியானால் இன்றைய காலத்தில் வெளிநாடுகளுக்குச் சம்பாதிக்கச் சென்று பல வருடங்களாக முடங்கிக் கிடப்பவர்களின் வீடுகளின் நிலைகளை என்னவென்று சொல்வது. ஒரு குடும்பப் பெண்ணை பாவத்தில் வீழ்த்துவதற்கு ஷைத்தானுக்கு எவ்வளவு பெரிய சந்தர்ப்பம் கிடைக்கிறது. இங்கே மனைவி பாவம் செய்கிறாள். அங்கே கணவன் பாவம் செய்கிறான். இது தான் பெரும்பாலான இடங்களில் நடைபெறுகிறது. பாவமே செய்யவில்லை என்றாலும் பாவத்தின் சிந்தனையாவது ஏற்படத்தானே செய்யும். பிறகு இபாதத் செய்வதற்கு மனம் இசையுமா? சிந்தித்துப் பாருங்கள். எனவே இது போன்ற நிலை ஏற்படாமல் இருக்க கணவன், மனைவி 4 மாதங்களுக்கு மேல் பிரிந்திருக்கக் கூடாது.

எப்பொழுதாவது நிர்ப்பந்தமாக ஒரு முறை இப்படி நிகழ்ந்துவிட்டால் 9 மாதங்களுக்காக அல்லது 1 வருடத்திற்காக சென்றார். மனைவியும் சந்தோஷமாக அனுமதி வழங்கி அனுப்பி வைத்தாள். கணவனும் சந்தோஷமாக சென்றான் என்றால் நிச்சயமாக அவள் தன் வாக்குறுதியைக் காப்பாற்றுவாள். ஏனெனில் இது ஆலோசனை செய்து எடுக்கப்பட்ட முடிவு. ஆனால் பொதுவாக பழக்கத்தில் இருப்பது போல வெளி நாடுகளுக்கு சென்று 4,5 வருடங்களாக திரும்பாமலிருப்பது பெருங்குற்றமாகும்.

**இது மனைவியின் உரிமை. அவளுக்கு நேரம் கொடுப்பது கணவனின் கடமை. உணவு கிடைத்தாலும், கிடைக்காவிட்டாலும் வீட்டிற்கு திரும்பிவிடு. நீயும் பட்டினியாக இரு. உன் மனைவியும் உன்னுடன் பட்டினியாக இருப்பாள். அவளுக்கு நீ தான் வேண்டும். நீயே கிடைக்காத போது இறைச்சியும் கோழியும் தேவையில்லை.**

**6) மனைவிக்கு கட்டுப்பாடு தனக்கு சுதந்திரம்**

கணவன் செய்யும் ஆறாவது தவறு மனைவிக்கு கட்டுப்பாடுகளை ஏற்படுத்துகிறார். தான் மட்டும் அந்த கட்டுப்பாடுகளை கடைபிடிக்காமல் சுதந்திரப் பறவையாக சுற்றித்திரிவார். மைத்துனனுடன் நீ பேசக்கூடாது பர்தாவில் இருக்க வேண்டும் என்று மனைவியை கண்டிக்கும் இவர் தன் மைத்துனியிடம் சிரித்து வழிந்து பேசுவார். பர்தாவை பேணமாட்டார். அந்நிய ஆண்களைப் பார்க்க கூடாது என்று மனைவியிடம் கூறிவிட்டு அவள் பக்கத்தில் இருக்கும் போதே அந்நியப் பெண்களை இச்சையுடன் பார்த்துக் கொண்டிருப்பார். மனைவியிடமே அவர்களைப் பற்றி விமர்சனமும் செய்வார். சிலர் வெளியில் செல்லும் போது முழு பர்தா அணியச் சொல்லி மனைவியை நிர்பந்தித்து அழைத்துச் செல்கிறார்கள். ஆனால் இவர்கள் முழங்கால் தெரியும் படி ஷார்ட் (கால் சட்டை) அணிந்து செல்கிறார்கள். இது மேலை நாட்டிலுள்ள வாலிபர்களிடம் பரவலாக காணப்படுகிறது.

நண்பர்களே! கட்டுப்பாடுகள் அனைவருக்கும் சமம் தானே! மனைவிக்கு நீங்கள் விதிக்கும் கட்டுப்பாடுகளை நீங்களும் பேண வேண்டும். இல்லை என்றால் பிரச்சனைகள் வந்து கொண்டே தான் இருக்கும்.

**7) குறைகாணுதல்**

சிறிய காரியங்களில் எல்லாம் மனைவியின் குறைகளை துருவித் துருவி ஆராய்வது கணவனின் பெரும் தவறுகளில் ஒன்று. இந்த பழக்கம் தான் வேர்பிடித்து வளர்ந்து எந்நேரமும் மனைவியை சந்தேகக் கண் கொண்டு பார்க்க வைக்கிறது. சந்தேகம் ஒரு கொடு நோய். இந்த வியாதி தொற்றிக் கொண்டவன். என் மனைவி இருக்குமிடத்தில் இப்பொழுது காற்று ஏன் வீசுகிறது என்று காற்றையும் சந்தேகப்படுவான்.

**இந்த வியாதியில் பீடிக்கப்பட்டவர்களைப் பார்க்கிறோம். மனைவி தன் உடன்பிறந்த சகோதரனிடம் சிரித்துப் பேசினால் கூட மனைவியை சந்தேகிப்பான். ஒரு குடும்பப் பெண் தன் சகோதரனிடம் கூட பேசக் கூடாது என்றால் வேறு யாரிடம் அவள் பேச முடியும்? இதன் அஸ்திவாரமே குறைகாணும் தன்மை தான்.**

பலரைப் பார்த்திருக்கிறேன். பலவகை உணவுகள் வைக்கப்பட்ட உணவு விரிப்பில் அமர்ந்தால் அதிலுள்ள நல்ல பொருள்களைப் பாராட்டமாட்டார்கள். ஆனால் குறைகளை மட்டும் கண்டுபிடித்து இதில் உப்பில்லை. அதில் உப்பு கூடிவிட்டது என்று பகிரங்கப் படுத்துவார்கள்.

பல வாலிபர்கள், நண்பர்களிடம் சர்க்கரையாகப் பேசுவார்கள். ஆனால் வீட்டிற்கு வந்து விட்டால் பாகற்காயாக மாறிவிடுவார்கள், எதற்கெடுத்தாலும் குறையைக் கண்டுபிடித்து மனைவியை கசப்பான வார்த்தைகளால் வசைபாடுவார்கள். இங்கே மனைவிக்கு எப்படி நிம்மதி கிடைக்கும்? நல்லதை ஏற்றுக் கொள்வது போன்று தவறுகளை சகித்துக் கொள்ளும் பண்பும் நம்மிடம் வரவேண்டும்.

இன்னும் பலர் வீட்டில் குழந்தைகளை குறை சொல்லிக் கொண்டே இருப்பார்கள். கொஞ்சம் சப்தமாக பேசினால் ஏன் இப்படி கத்துகிறாய் என்று கத்துவார்கள். அட இவர்கள் குழந்தைகள். விளையாடுவார்கள், குதிப்பார்கள், ஓடுவார்கள். இதையெல்லாம் குறை சொன்னால் என்ன செய்ய முடியும்? ஆனால் பெரிய தவறு செய்தால் தண்டிக்கலாம். கண்டிக்கலாம். சிறிய விஷயங்களை கண்டும் காணாமல் விட்டு விடுவது பெருந்தன்மையாகும்.

கணவன் சில விஷயங்களைப் பொறுத்துப் போகத்தான் வேண்டும். ஆனால் மனைவியோ குழந்தைகளோ கட்டுப்பாடுகளை மீறினால், மார்க்கத்திற்கு புறம்பான காரியங்களில் ஈடுபட்டால் கட்டாயம் நடவடிக்கை எடுக்க வேண்டும். எனவே ஆண்கள் மனைவியின் சிறு தவறுகளை எந்நேரமும் தேடிக்கொண்டு அலையக் கூடாது.

**8) மூன்றாவது நபருக்காக மனைவியிடம் சண்டை**

கணவன் மூன்றாவது நபருக்காக மனைவியிடம் சண்டை போடுவது எட்டாவது பெரிய தவறாகும். இந்த அடியேனின் அனுபவம் யாதெனில். கணவன், மனைவி இருவரும் தனக்காக பெரும்பாலும் சண்டையிடுவதில்லை. எப்பொழுதாவது இருவருக்கிடையே பிரச்சனை ஏற்படுகிறதென்றால் அது மூன்றாவது ஒருவருக்காகத் தான் ஏற்படுகிறது. அந்த மூன்றாம் நபர் கணவனின் தாயாக அல்லது சகோதரியாக அல்லது மனைவியின் தாய், தந்தை, சகோதரியாக அல்லது பிஸ்னஸாக அல்லது வேறொரு பொருளாக இருக்கலாம். இப்படி மற்றவருக்காக தம்பதியர் சண்டையிடுவது பெருந் தவறு. இதை உடனே கைவிட்டுவிட வேண்டும்.

***மூன்றாம் நபரும் கணவன் மனைவிக்கு மத்தியில் பிரச்சனையை ஏற்படுத்தக்கூடிய எந்தப் பேச்சையும் பேசக் கூடாது.***

ஞாபகத்தில் வையுங்கள். லைலத்துல் கத்ர் இரவில் அனைத்து

முஸ்லிம்களுக்கும் பாவ மன்னிப்பு வழங்கப்படுகிறது. சிலருக்கு மட்டும் பாவமன்னிப்பு கிடைப்பதில்லை. முஃமின்களின் விஷயத்தில் தன் உள்ளத்தில் குரோதம் கொண்டுள்ள மனிதனும் அவர்களில் ஒருவன் என்று ஹதீஸில் வந்துள்ளது. அதே போல் கணவன் மனைவிக்கிடையே பிரச்சனையை ஏற்படுத்தி அவர்களுக்கிடையே வெறுப்பு ஏற்படக் காரணமாக இருக்கும் மனிதனுக்கும் லைலத்துல் கத்ர் இரவில் மன்னிப்பு வழங்கப்படுவதில்லை என்று ஹதீஸில் வந்துள்ளது.

இங்கே மாமியார் யோசிக்க வேண்டும். நான் ஒரு வார்த்தை கூறி அதனால் என் மகன் தன் மனைவியிடம் சண்டை செய்தால் நானும் பாவமன்னிப்பு பெறாதவர்களில் சேர்க்கப்பட்டு விடுவேனோ என்று பயப்பட வேண்டும். இவ்வாறே வீட்டில் அனைவரும் சிந்திக்க வேண்டும். ஏனெனில் கணவன் மனைவிக்கு மத்தியில் பிரச்சனையை ஏற்படுத்தி பிளவை உண்டு பண்ணுவது லைலத்துல் கத்ரின் மன்னிப்பையும் ஹராமாக்கிவிடக்கூடிய கொடிய பாவம் என்பதை மறந்து விடக்கூடாது.

எனவே கணவன், மனைவி இருவரும் மற்றவர்களை காரணம் காட்டி தங்களுக்கிடையே சண்டையிடக்கூடாது.

**9) பழி சுமத்துதல்**

கணவன் குடும்பத்தில் செய்யும் ஒன்பதாவது அபாயகரமான தவறு சிறிய விஷயங்களுக்காக தன் மனைவியின் மீது சந்தேகம் கொள்வது அல்லது வீண் பழி சுமத்துவது. மனைவி போனில் பேசுவதை கணவன் பார்த்தான். உடனே மனைவி தான் யாரிடம் பேசினாள் என்பதை தெளிவாக கூறிவிட்டாள். பிறகும் இல்லை, இல்லை உனக்கு வேறு யாரிடமிருந்தோ போன் வருகிறது என்று சந்தேகப்பட்டு வீண் பழி சுமத்துகிறான். இது மிகப் பெரிய தவறு. தெளிவாக எதையும் தெரிந்து கொள்ளாமல் அல்லது மார்க்கம் கூறும் ஆதாரங்கள் இல்லாமல் அற்ப விஷயங்களுக்காக மனைவியை சந்தேகிப்பது பழிசுமத்துவது குடும்பத்தின் அஸ்திவாரத்தையே ஆட்டங்காண செய்துவிடும். ஒரு பெண், கணவன் தரும் எந்த துன்பத்தையும் தாங்கிக் கொள்வாள். ஆனால் கணவனால் சந்தேகிக்கப்படுவதையும் வீண்பழி சுமத்தப்படுவதையும் தாங்கிக் கொள்ள மாட்டாள்.

நடத்தைப் பற்றி சந்தேகிப்பது பழி சுமத்துவது மட்டுமல்ல. சின்ன சின்ன பழிகளையும் மனைவியின் மீதே சுமத்துகிறார்கள். உன்னால் தான் இது இப்படியானது. உன்னால் தான் பிள்ளைகள் கெட்டுப் போனார்கள். உன்னால் தான் இந்த வேலை அதன் நேரத்தில் நடக்கவில்லை என்றெல்லாம் மனைவியை குற்றவாளியாக்குகிறார்கள். கொஞ்சமாவது சிந்திக்க வேண்டாமா? மகன் கெட்டுப் போய் விட்டான் என்றால் அதற்கு நீங்களும் தானே பொறுப்பு. நீங்கள் பெற்ற மகன் தானே அவன்? அவன் கெட்டுப் போனதில் உங்களுக்கும் பங்கு இருக்கிறதல்லவா?

உன்னால் தான் அந்த நிகழ்ச்சிக்கு சரியான நேரத்தில் போக முடியவில்லை என்று மனைவியின் மீது பழி சுமத்துகிறீர்கள். ஆனால் குழந்தைகளால் தான் தாமதமானது என்பதை யோசிப்பதில்லையே ஏன்?

**10) மனைவியின் உறவினர்களை ஒதுக்குதல்**

கணவன் செய்யும் பத்தாவது பெரும் தவறு. மனைவியிடம் உன் மீது எனக்கு அளவு கடந்த பிரியம் இருக்கிறது. ஆனால் உன் தாய், தந்தை உன் சகோதரர்களைக் கண்டாலே வெறுப்பாக இருக்கிறது என்று கூறுவான். ஒரு இளம் பெண்ணிடம் அவளது உறவினர்களைப் பற்றி இழிவாக வெறுப்பாக பேசினால் அவளது உள்ளம் என்ன பாடுபடும். தன் பெற்றோர், உறவினர் மீது ஒரு பெண்ணுக்கு அன்பு ஏற்படுவது இயற்கை. அவளது பெற்றோரை குறை கூறி அந்த அன்பை சீண்டும் போது எந்தப் பெண்ணும் பொருத்துக் கொண்டிருக்க மாட்டாள். நிர்ப்பந்தத்தால் அவள் மௌனித்து விட்டாலும் உள்ளே அவள் உள்ளம் உடைந்து போய்விடும்.

தன் உறவினர்களைப் பற்றி மனைவி குறை சொல்லும் போது கணவனுக்கு உள்ளம் வலிக்கிறதல்லவா? அதே போல் தானே அவளது மனமும் வெந்து கொண்டிருக்கும். கணவன் தன் உறவினர்களை சந்தோஷப்படுத்த நினைக்கிறான். மனைவியும் தன் உறவினர்களை மகிழ்ச்சியாக வைக்க விரும்புகிறாள். இதற்கு மற்றவர் முரண்படும் போது சண்டைகள் உருவாகின்றன. நிம்மதி பறி போய் விடுகிறது.

இப்பிரச்சினைக்கு நல்லதொரு தீர்வு என்னவென்றால் திருமணத்திற்கு முன் எனக்கு ஒரு தாய், தந்தை இருந்தனர். திருமணத்திற்குப் பின் எனக்கு இரு தாய்கள் இரு தந்தைகள் என்று இருவரும் முடிவெடுக்க வேண்டும். ஏனெனில் ஷரீஅத் மாமனார், மாமியாருக்கு பெற்றோரின் அந்தஸ்த்தை வழங்கியுள்ளது. இருவரும் மாமனார், மாமியாரை தாய், தந்தையாக மதித்து நடந்தால் பிரச்சனைகளுக்கு இடமே இருக்காது.

கணவனின் உறவினர் அனைவருடனும் மார்க்க முறைப்படி சந்தோஷமாக பழகுவது மனைவியின் கடமை. மனைவியின் உறவினரை சந்தோஷமாக நடத்துவது கணவனின் கடமை. ஆனால் இன்றைய இளைய சமுதாயம் பரவலாக இந்த தவறை செய்து வருகிறது. இதன் அவசியத்தைப் புரியாமல், நீ உன் வீட்டிற்கு செல்லக் கூடாது. உன் வீட்டாருடன் பேசக் கூடாது என்று மனைவிக்கு தடை உத்தரவு போடுகிறார்கள். இவர்களது இச்செயல் பெரும் ஆச்சர்யத்தை அளிக்கிறது.

**ஒரு தம்பதியின் கதை**

ஒரு முறை UAE–ல் நம்மிடம் பைஅத் செய்திருந்த தம்பதிகளை சந்தித்தேன். இருவரும் மார்க்கப் பற்றுள்ளவர்கள். தீனுடைய வேலைகளை நன்றாக செய்து வந்தனர். இந்தியாவின் ஒரு பெரிய மதரஸாவில் ஓதிய ஆலிமாவான மனைவி ஒரே வாக்கியத்தில் தன் மனக் கவலைகளை என் முன் கொட்டினாள். "நான் மிகப்பெரிய பிரச்சனையில் இருக்கிறேன் ஹள்ரத்! துஆ செய்யுங்கள்" என்றாள்.

நான் இருவரையும் அழைத்து குடும்ப வாழ்க்கைப் பற்றி விசாரித்தேன். கணவன் " ஹள்ரத் நாங்கள் சந்தோஷமாக வாழ்கிறோம் என்றார். அமைததியாக அமர்ந்திருந்த மனைவி அழ ஆரம்பித்துவிட்டாள். ஏதோ சிக்கல் இருப்பதாக விளங்கிக் கொண்டேன். நன்கு விசாரித்த போது கணவன், தன் மனைவியை தாய் வீட்டிற்கு செல்லக்கூடாது. போன் செய்யக் கூடாது. தபால் கூட எழுதக் கூடாது என்று தடை செய்து வைத்திருந்தது தெரிய வந்தது. ஆனால் கணவனோ 3,4 முறை தன் வீட்டிற்கு சென்று வருகிறார். மனைவிக்கு முன்னால் அமர்ந்து கொண்டே தன் வீட்டிற்கு போன் செய்து பேசுகிறார்.

இது பெரிய தவறு என்று அவருக்கு உணர்த்தினேன். நீ ஒரு முறை உன் வீட்டிற்கு சென்றால் உன் மனைவியை ஒரு முறை அவள் வீட்டிற்கு அழைத்துச் செல்ல வேண்டும். நீ ஒரு முறை போன் செய்தால் அவள் போன் செய்ய ஒரு முறை அனுமதி வழங்க வேண்டும் என்று கூறினேன். மனைவி கூறினால் "ஹள்ரத்! தினமும் பேச வேண்டிய கட்டாயமில்லை. மாதத்தில் ஒரு முறை பேசினால் போதும். அதுவே எனக்கு பெருநாளாக ஆகிவிடும்" என்றாள்.

இதனை உணர்ந்த பின் அவர்கள் வீடு அமைதிப் பூங்காவாக காட்சியளிக்க ஆரம்பித்தது. ஒரே மாதத்தில் அவர் என்னிடம் வந்து ஹள்ரத் உங்களுக்கு எப்படி நன்றி சொல்வது? ஷைத்தானின் சூழ்ச்சியால் வீட்டை நரகமாக்கி வைத்திருந்தேன். இப்பொழுது எங்கள் வீடு சுவர்க்கமாக பிரகாசிக்கிறது என்றார்.

**சாராம்சம்**

நண்பர்களே! இவை அபாயகரமான பத்து தவறுகள். இவைகளைத் தவிர இன்னும் பல தவறுகள் இருக்கலாம். அடியேனின் உள்ளத்தில் உதித்த விஷயங்களை உங்களுக்கு முன்னால் உதிர்த்து விட்டேன். இந்த தவறுகளிலிருந்து ஆண்கள் தங்களை பாதுகாத்துக் கொள்ள வேண்டும். அப்பொழுது அல்லாஹ் சந்தோஷம் நிறைந்த வாழ்க்கையைத் தருவான். வீட்டில் நிம்மதி பொங்கும். மேலும் அல்லாஹ்விடம் கண்ணியமும் நன்மைகளும் கிடைக்கும்.

அல்லாஹ் இதுவரை நாம் செய்து கொண்டிருந்த பாவங்களை மன்னித்து கியாமத் நாளின் கேவலத்தை விட்டும் நம்மை பாதுகாப்பானாக!

شوہر کیلئے دس سنہری اصول

# கணவனிடம் இருக்க வேண்டிய 10 பண்புகள்

اَلْحَمْدُ لِلّٰهِ وَكَفٰى وَسَلَامٌ عَلٰى عِبَادِهِ الَّذِيْنَ اصْطَفٰى اَمَّا بَعْدُ!

فَاَعُوْذُ بِاللّٰهِ مِنَ الشَّيْطٰنِ الرَّجِيْمِ ○ بِسْمِ اللّٰهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ

وَمِنْ اٰيٰتِهٖۤ اَنْ خَلَقَ لَكُمْ مِّنْ اَنْفُسِكُمْ اَزْوَاجًا لِّتَسْكُنُوْۤا اِلَيْهَا

وَجَعَلَ بَيْنَكُمْ مَّوَدَّةً وَّرَحْمَةً ؕ اِنَّ فِيْ ذٰلِكَ لَاٰيٰتٍ لِّقَوْمٍ يَّتَفَكَّرُوْنَ ○

سُبْحَانَ رَبِّكَ رَبِّ الْعِزَّةِ عَمَّا يَصِفُوْنَ وَسَلَامٌ عَلَى الْمُرْسَلِيْنَ وَالْحَمْدُ لِلّٰهِ رَبِّ الْعَالَمِيْنَ ○

اَللّٰهُمَّ صَلِّ عَلٰى سَيِّدِنَا مُحَمَّدٍ وَّعَلٰى اٰلِ سَيِّدِنَا مُحَمَّدٍ وَّبَارِكْ وَسَلِّمْ

இல்லற வாழ்வில் கணவன் கடைபிடிக்க வேண்டிய 10 பொன்னான வழிமுறைகள் உள்ளன. அவற்றின் படி ஒரு கணவன் செயல்படத் துவங்கி விட்டால் இல்லற வாழ்க்கையில் நிம்மதி. சந்தோஷம் பொங்க ஆரம்பிக்கும். இந்த விஷயங்கள் பார்ப்பதற்கு மிகச் சிறியவையாக தோன்றினாலும் இச்சிறு விஷயங்களை அலட்சியம் செய்வதனாலேயே பெரும் பிரச்சனைகள் உருவாகின்றன. பொடிப் பொடிக்கற்களே பெரிய மலையாகி விடுகின்றன. சிறு துளியே பெரு வெள்ளமாகிறது.

இவ்விஷயங்களும் அப்படித்தான் வெளிப்படையில் சாதாரணமாகத் தெரிந்தாலும் உண்மையில் இதை விட்டு விடுவதால் இல்லற வாழ்வில் பெரும் விளைவு ஏற்படுகிறது. நீங்கள் இன்று முதல் இதன்படி செயல்படத் துவங்கி விடுவீர்களானால் அதன் மூலம் உங்கள் இல்லற வாழ்க்கையில் எவ்வளவு சந்தோஷம் ஏற்படும் என்பதை உணர்வீர்கள்.

**1) எப்பொழுதும் வீட்டிற்குள் புன்சிரிப்புடன் வாருங்கள்!**

எப்பொழுது வீட்டிற்குள் வந்தாலும் சிரித்த முகத்துடன் வரவேண்டும் என்பதை உங்கள் வாழ்வின் வழிமுறையாக்கிக் கொள்ளுங்கள். ஏனெனில்

இது பூமான் நபி ﷺ அவர்களின் புனித சுன்னத்தாகும். ஹள்ரத் ஆயிஷா (ரலி) அவர்கள் கூறுகிறார்கள். நபி ﷺ அவர்கள் எப்பொழுது வீட்டிற்குள் வந்தாலும் புன்சிரிப்புடன் வருவார்கள். வீட்டிலுள்ளவர்களுக்கு ஸலாம் சொல்வார்கள்.

இது பார்ப்பதற்கு சாதாரணமாக தெரியலாம். ஆனால் இதன் பரக்கத்துக்களை பல முறை அனுபவத்தில் பார்த்திருக்கிறேன்.

**சுன்னத்தான அமல் தலாக்கைத் தடுத்தது!**

ஒரு முறை கராச்சியில் ஒரு தம்பதி என்னிடம் வந்தனர். அவர்களுக்கு திருமணமாகி ஆறு வருடங்கள் ஆகிவிட்டன. இருவரும் மார்க்கப் பற்றுள்ளவர்கள். நாம் இருவரும் இனி சேர்ந்து வாழ முடியாது என்ற முடிவுக்கு இருவரும் வந்து விட்டனர். ஆனால் இந்த முடிவை தங்கள் பெற்றோரிடம் கூற முடியாமல் முதலில் நமது ஹள்ரத்திடம் தெரிவிப்போம் என்று என்னிடம் வந்தனர். அடியேன் இருவரின் இல்லற வாழ்க்கையைப் பற்றி விசாரித்தேன். இருவரிடமும் சிறிது நேரம் பேசியதில் விஷயம் புரிந்தது. நாட்டின் பொருளாதார வீழ்ச்சியின் காரணமாக கணவனின் வியாபாரம் தற்சமயம் மந்தமாகிவிட்டது. பெரும் முயற்சி செய்தும் நிலைமையை சமாளிக்க முடியவில்லை. சரக்கு கொடுத்தவர்கள் பணம் கேட்கிறார்கள். அவரிடம் பணமுமில்லை. இதனால் அவர் வீட்டிற்கு வரும் போதெல்லாம் இதே சிந்தனை. கவலையில் வருகிறார். மனைவியிடம் பேசுவதில்லை. அவளுக்கு நேரம் கொடுப்பதில்லை. ஓயாத மன உளைச்சலின் காரணமாக சிறிய விஷயத்திற்கெல்லாம் மனைவி, மக்கள் மீது எரிந்து விழுகிறார்.

இங்கே மனைவி உணவு சமைத்து மணிக்கணக்கில் அவர் வரட்டும் அவருடன் சேர்ந்து சாப்பிடலாம் என்ற சிந்தனையில் பட்டினியாக காத்துக் கிடக்கிறாள். ஆனால் கணவர் வரும்போதே கடுகடுத்த முகத்துடன் எதற்கெடுத்தாலும் எரிந்துவிழுகிறார். இவருக்கு என்னைப் பிடிக்கவில்லை. எனவே தான் இப்படி நடந்து கொள்கிறார் என்று மனைவி நினைக்கிறாள். அங்கே சண்டை வெடிக்கிறது.

அடியேன் முழு விபரத்தை கேட்டுவிட்டு, நீங்கள் ஆறுமாதம் வரை இந்த விஷயத்தை பெற்றோருக்கு தெரிவிக்க வேண்டாம். அந்த ஆறு மாதத்தில் எனது ஓர் உபதேசத்தின் படி அமல் செய்து வாருங்கள். உங்கள்

பிரச்சனைக்கு விடிவுகாலம் பிறக்கும் என்றேன். அவர்கள் ஏற்றுக் கொண்டார்கள்.

நான் கணவனிடம் கூறினேன். பாருங்கள்! நபி ﷺ அவர்கள் எப்பொழுதும் வீட்டில் நுழையும் போது சிரித்த முகத்துடன் வருவார்கள். வீட்டிலுள்ளவர்களுக்கு ஸலாம் சொல்வார்கள். இது நபி ﷺ அவர்களின் புனிதமான சுன்னத். ஆனால் உங்கள் வாழ்க்கையில் இந்த சுன்னத் விடுபட்டுள்ளது. இதனால் தான் உங்களுக்குள் பிரச்சனைகள் வருகின்றன. இந்த சுன்னத்தைப் பின்பற்றி வாருங்கள். எப்பொழுது வீட்டில் நுழைந்தாலும் சிரித்த முகத்துடன் நுழைவேன். வீட்டாருக்கு ஸலாம் சொல்வேன் என்று வாக்குறுதி கொடுங்கள் என்றேன். ஹள்ரத்! இது சாதாரண விஷயம் தானே? என்று கேட்டார். இது சாதாரணமாகத் தான் தோன்றும். ஆனால் இதன்படி அமல் செய்யும் போது தான் இதன் மதிப்பு விளங்கும் என்று கூறினேன்.

உங்கள் வியாபாரம் சரியில்லை என்றாலும் அந்த பிரச்சனையை உங்கள் கடையில் அல்லது அலுவலகத்தில் விட்டுவிடுங்கள். வீட்டார் என்ன தவறு செய்தார்கள்? அவர்களுக்கு அன்பு நிறைந்த வாழ்க்கை தான் வேண்டும். எனவே வீட்டு வாயிற்படியை மிதிக்கும் போதே வியாபார சிந்தனையை காலுக்கடியில் போட்டுவிட்டு சந்தோஷமாக சிரித்த முகத்துடன் வீட்டிற்குள் வாருங்கள். மனைவியை நோக்கி பிரியமாகப் பார்த்து அவளுக்கு ஸலாம் சொல்லுங்கள். இது நபி ﷺ அவர்களின் சுன்னத்தாகும். இதை செய்து பாருங்கள். பிறகு அதன் பரக்கத்தை உணர்வீர்கள் என்று சொல்லி அனுப்பி வைத்தேன்.

ஒரு வாரம் தான் கழிந்திருக்கும். அந்த பெண் கூறினாள். ஹள்ரத்! வாழ்க்கையின் இந்த வாரம் புதிதாக திருமணமான தம்பதியின் முதல் வாரம் போல கழிந்தது. நாங்கள் இருவரும் ஒருவரை ஒருவர் நேசிப்பது போல வேறு யாரும் பிரியம் கொள்ள மாட்டார்கள் என்று நினைக்கிறேன். இனி வாழ்க்கையில் பிரிவு என்ற எண்ணமே வரக்கூடாது என்று முடிவு செய்துவிட்டோம். பிரச்சனைகளின் சாக்கடையாக இருந்த எங்கள் வீடு ஒரு சுன்னத்தை கடைபிடித்த காரணத்தால் சந்தோஷப் பூங்காவாக மாறிவிட்டது.

**ஷைத்தானை வீட்டில் நுழைய அனுமதிக்காதீர்**

கணவர் வீட்டில் நுழைவதற்கு முன் வெளிப்பிரச்சனைகளை வெளியிலேயே புதைத்து விட வேண்டும். அவருக்கு கடன் தரவேண்டும். இவர் பிரச்சனை பண்ணுகிறார். வியாபாரம் சரியில்லை. இது போன்ற எந்த பிரச்சனை நடந்தாலும் அதில் மனைவிக்கு என்ன சம்பந்தம் இருக்கிறது? அவள் என்ன தவறு செய்தாள்? எனவே பிரச்சனைகளை வெளியிலேயே குழிதோண்டி புதைத்து விட்டு வீட்டிற்குள் கால் வைக்க வேண்டும். பிறகு நபி ﷺ அவர்களின் புனித சுன்னத்தின் படி புன்சிரிப்புடன் மனைவியை நோக்கி பிரியமாகப் பார்த்து அவளுக்கு ஸலாம் சொல்லுங்கள். இப்படி பிரியத்துடன் ஸலாம் சொல்லும் போது அன்புக்கு பதிலாக அன்பு பரிமாறப்படும் என்பது தெளிவான விஷயம். இவ்வாறு வீட்டில் ஷைத்தான் நுழைய சந்தர்ப்பம் கொடுக்காதீர்கள்.

பொதுவாக மக்கள் வீட்டில் நுழையும் போது "பிஸ்மில்லாஹ்" கூறுவதையும் வீட்டில் நுழையும் போது ஓத வேண்டிய துஆவையும் மறந்து விடுகின்றனர். ஹதீஸில் வருகிறது ஒரு மனிதன் வீட்டில் நுழையும்போது ஷைத்தானும் அவனுடன் வருகிறான். அவன் சுன்னத்தான துஆ ஓதிவிட்டால் ஷைத்தான் ஒதுங்கிப் போய்விடுகிறான். அவன் துஆ ஓதவில்லை என்றால் ஷைத்தானும் சேர்ந்து நுழைகிறான். எனவே கணவர் வீட்டில் நுழையும் போது புன்னகை முகத்துடன் நுழைந்து மனைவியை அன்பாக பார்த்து ஸலாம் கூறவேண்டும். அவளை நலம் விசாரிக்க வேண்டும். இது கணவன் கடைபிடிக்க வேண்டிய முதல் வழிமுறையாகும். மனைவியின் நிலைமையை விசாரித்து அவளிடம் பேசிய இந்த இரண்டு நிமிடம் வீட்டில் அவன் இருக்கப் போகும் மொத்த நேரமும் மகிழ்ச்சியாகிவிட காரணமாகிவிடும்.

**2) மனைவியின் நல்ல வேலைகளை பாராட்டுதல்**

கணவனிடம் இருக்க வேண்டிய இரண்டாவது விஷயம்; வீட்டில் மனைவி எந்த ஒரு நல்ல காரியம் செய்தாலும் கணவன் கண்டிப்பாக அவளைப் பாராட்ட வேண்டும்.நன்றாக உணவு சமைத்து இருக்கிறாள். வீட்டை சுத்தமாக வைத்திருக்கிறாள், பொருள்களை அழகாக அடுக்கி வைத்திருக்கிறாள். வீடு பார்க்கவே அழகாக இருக்கிறது. ஒவ்வொரு வேலையும் குறித்த நேரத்தில்

நடைபெறுகிறது என்றால் கணவன், மனைவியின் இந்த நல்ல செயல்களைப் புகழ வேண்டும். தவறுகளை சுட்டிக்காட்ட கணவன் தயங்குவதில்லை. பிறகு பாராட்ட மட்டும் தயங்குவது ஏன்?

மனிதனின் இயற்கை சுபாவம் எந்த ஒரு நல்ல காரியம் செய்தாலும் தன்னை பிறர் பாராட்ட வேண்டும் என்று நினைக்கிறான். மனைவியும் தன் கணவனுக்காக வீட்டை சுத்தம் செய்வது முதல் எல்லா வேலைகளையும் குறித்த நேரத்தில் சரியாக செய்து முடிக்க வேண்டுமென நாள் முழுக்க பாடுபடுகிறாள். அவளது முயற்சிக்கு பலன் கிடைக்க வேண்டுமல்லவா? அதற்காக கணவன் தன் நாவால் பாராட்டி இரண்டு, மூன்று வார்த்தைகளாவது சொல்ல வேண்டும். இந்த வேலையை சரியாக செய்திருக்கிறாய். சாப்பாடு சுவையாக இருக்கிறது என்று பாராட்டுங்கள். இது நபி ﷺ அவர்களின் சுன்னத்தாக இருக்கிறது. நபி ﷺ அவர்களுக்கு முன்னால் உணவு பரிமாறப்படும் போது அது விருப்பமில்லாத உணவு என்றால் அமைதியாக அதனை ஒதுக்கி விடுவார்கள். நாவால் எதுவும் கூறமாட்டார்கள். அது நன்றாக இருந்தால் இந்த உணவு நன்றாக இருக்கிறதே! என்று கூறுவார்கள். அதாவது சமைத்தவர்களுக்கு ஆர்வமூட்டும் வார்த்தைகள் கூறுவார்கள்.

இதே போன்று நீ என் ஆடைகளை சரியான நேரத்தில் தயார் செய்திருந்தாய். பிள்ளைகளை குறித்த நேரத்தில் தயார் செய்து பள்ளிக்கு அனுப்பிவிட்டாய் என்று மற்ற வேலைகளையும் பாராட்ட வேண்டும். நல்ல வேலைகளைத்தான் 'நன்றாக நடந்துள்ளன' என்று சொல்லப் போகிறோம். அதற்கு என்ன தடங்கல் இருக்கிறது. நல்ல வேலைகளை பாராட்ட வேண்டிய நேரத்தில் ஆண்களின் நாவுகள் ஊமையாகிவிடுவது ஏன் என்று தெரியவில்லை. ஆனால் ஒரு சிறு தவறு கண்ணில் பட்டுவிட்டாலும் அதை குறை சொல்லாமல் விடுவதில்லை. இது பெரிய அநியாயம். இந்த அநீதத்தின் காரணமாகவே வீட்டில் பிரச்சனைகள் உருவாகின்றன.

**நபி ﷺ அவர்களின் சீர்திருத்தும் பாணி**

ஒரு தவறை குறை கூறும் போது நல்லவற்றை புகழவும் வேண்டும் இது அடிப்படை விதி. ஒருபெண்ணின் இரு வேலைகளைப் புகழ்ந்து பாராட்டிய பின்பு

அவளின் இரு செயல்களைக் குறை சொல்லி அதட்டினாலும் அந்த அதட்டலையும் அவள் சந்தோஷமாக ஏற்றுக் கொண்டு தன்னை சீர்திருத்திக் கொள்ள முயலுவாள்.

நபி ﷺ அவர்களின் செயல்முறை இப்படித்தான் இருந்தது. ஒரு ஸஹாபிக்கு தஹஜ்ஜுத் தொழுகைக்கு எழுவது சிரமமாக இருந்தது. நபி ﷺ அவர்கள் அவரை அழைத்து அவரது பெயரைச் சொல்லி இவர் நல்ல மனிதர். அதே நேரத்தில் தஹஜ்ஜுத் தொழுவாரானால் இன்னும் நன்றாக இருக்கும் என்றார்கள். இங்கே பாருங்கள். நபி ﷺ அவர்கள் சொல்ல வேண்டிய விஷயத்தை மற்றவர்களின் மனதில் பதியும் படி அழகிய பாணியில் முன் வைத்துள்ளார்கள்.

இதேப் போன்று மனைவி நல்ல காரியங்களை செய்யும் போது அவளைப் பாராட்டி, தவறு செய்யும் போது அதனை சுட்டிக் காட்டினால் உங்கள் பேச்சு மனதில் பதியும். அவள் உங்கள் பேச்சுக்கு மதிப்பளித்து விரைவில் ஏற்றுக் கொள்வாள். பாராட்ட வேண்டிய நேரத்தில் ஊமையாக இருந்து விட்டு குறை மட்டும் கூறி வந்தால் வெறுப்பு தான் வரும். இப்படித் தான் வீடுகளில் சண்டை உருவாகிறது. நான் செய்யும் வேலைகள் இவருக்கு பிடிப்பதே இல்லை என்று கூறி மனைவி சண்டையிடுவாள்.

**பிராணிகளின் வளர்ப்பில் விஞ்ஞானம்**

இன்றைய விஞ்ஞானமும் இந்த உண்மையைக் கூறுகிறது. விலங்குகளுக்கும் பாராட்டு தெரிவிக்கும் போது அவையும் நன்றாக வேலை செய்கின்றன. பிராணிகளுக்கு பயிற்சி அளிப்பவர்களிடம் கேட்டுப்பாருங்கள்! அவர்களும் இதே வழிமுறையைக் கையாளுகிறார்கள். உதாரணமாக டால்ஃபீனுக்கு விளையாட கற்றுத் தரும் பயிற்சியாளர்கள் ஓர் ஆச்சரியமான முறையை பின்பற்றுகிறார்கள்.

ஒரு மனிதனின் சைகை அல்லது சப்தத்திற்கிணங்க டால்ஃபீன் தண்ணீரிலிருந்து தாவி மேலே வந்து சில அடி உயரத்தில் தொங்கிக் கொண்டிருக்கும் பந்தை தட்டி விளையாடுகிறது. ஆனால் நடப்பதென்ன? அது பந்தை தட்டிவிட்டு தன் பயிற்சியாளனிடம் வருகிறது. அவன் அதன் வாயில் சில மீன் குஞ்சுகளைப் போடுகிறான். இது தானே பாராட்டு என்பது. இதே

வழிமுறைதான் எல்லா இடத்திலும் பின்பற்றப்படுகிறது. பயிற்சியாளர் சொல்வது போல ஒரு காரியத்தை அது செய்யும் பொழுது அவர் அதைப் பாராட்டி பரிசு தருகிறார். அந்த பரிசை வாங்கிக் கொண்டு, ஒரு பிராணி கூட மனிதனின் செயல்பாடுகளை செய்ய ஆரம்பிக்கிறது. இதே முறையில் பாராட்டி பயிற்சி கொடுத்தால் கிளி மனிதனைப் போல பேசுகிறது. வீட்டிற்கு வருபவர்களைப் பார்த்து ஸலாம் சொல்கிறது.

நாங்கள் அமெரிக்காவில் ஒரு வீட்டிற்குச் சென்றோம். வீட்டில் நுழைந்தவுடன் ஸலாம் சொல்லும் சப்தம் கேட்டது பதில் சொல்லி விட்டு தேடினால் அங்கே யாருமே தென்படவில்லை. ஆச்சரியப்பட்டு வீட்டுக்காரரிடம் கேட்ட பொழுது, அவர் சிரித்துக் கொண்டே ஒரு கூண்டிலிருந்த கிளியைக் காட்டினார். அது வீட்டிற்கு வருபவர்களுக்கு அஸ்ஸலாமு அலைக்கும் என்று சொல்கிறது. மிகவும் ஆச்சரியமாக இருந்தது.

நான் அவரிடம் இதற்கு எப்படி கற்றுக் கொடுத்தீர்கள் என்று கேட்டேன். அதற்கு அவர் ஹள்ரத்! பறவைகளுக்கு பயிற்சி அளிக்க இலேசான வழிமுறை என்னவென்றால் அதை ஒரு வேலை செய்ய சொல்கிறேன். அது அக்காரியத்தை செய்து விட்டால் உடனே அதற்கு பரிசு வழங்கி பாராட்ட வேண்டும். முதன் முறையாக அது ஒரு வார்த்தையை சரியாக சொல்லும் போது பிரியம் காட்டி அதற்கு தானியங்களைப் போடுவேன். பிறகு அது என் பேச்சை கேட்க ஆரம்பித்து விடுகிறது என்றார்.

மனிதன் பாராட்டுத் தெரிவிக்கும் போது பிராணிகளே மனிதன் செய்யும் வேலைகளை செய்கின்றன என்றால் மனிதன் செய்ய மாட்டானா? ஒரு கணவன் தன் மனைவியை ஆர்வப்படுத்துகிறான். நல்ல காரியங்கள் செய்யும் போது அவ்வப்போது அன்பளிப்புகளை வழங்கி வருகிறான் என்றால் மனைவி நல்ல வேலைகளை மேலும் சிறப்பாக செய்ய மாட்டாளா? மாறாக தன் கணவனின் மனதைக் கவர அவள் மென்மேலும் முயற்சி செய்ய நினைப்பாள். எனவே மனைவியின் நல்ல வேலைகளை பாராட்ட வேண்டும் என்பதை மறந்துவிடாதீர்கள்.

உதாரணத்திற்கு நீங்கள் வெளியிலிருந்து வீட்டிற்கு வருகிறீர்கள். உங்கள் அன்பு மனைவி தொழுது விட்டு முஸல்லாவில் அமர்ந்து தஸ்பீஹ்

அல்லது குர்ஆன் ஓதிக் கொண்டிருக்கிறாள். இதைப் பார்த்து "நீ முஸல்லாவில் அமர்ந்திருப்பது எனக்கு மிகவும் பிடித்திருக்கிறது" என்று இரு வார்த்தைகள் கூறுங்கள். இதற்கு 3 வினாடிகள் கூடத் தேவையில்லையே! ஆனால் இந்த வார்த்தைகளை கூறியதால் உங்கள் மனைவி முஸல்லாவில் அமர்வதை பழக்கப்படுத்திக் கொள்வாள். இது என் கணவனுக்கு பிடிக்கும் என்று அவளது உள்ளத்தில் உறுதியாகிவிட்டால் மேலும் சந்தோஷமாக செய்ய ஆரம்பித்து விடுவாள்.

மூன்று வினாடிகளின் சில வார்த்தைகள், உங்கள் மனைவியின் வாழ்க்கைப் பாதையை மாற்றிவிட்டன. இது என் கணவருக்கு பிடிக்கும் என்று மணிக்கணக்கில் இபாதத் செய்ய ஆரம்பித்து விடுவாள். இந்த வார்த்தைகளால் நீங்கள் உங்கள் மனைவியின் மனதை வென்று விட்டீர்கள். நல்ல வழியிலே அவளை மேலும் பலப்படுத்தி விட்டீர்கள். இதன் மூலம் மனிதனின் நல்ல காரியங்களைப் பாராட்ட வேண்டும். அப்பொழுது அவன் அக்காரியத்தை மேலும் பிரியத்துடன் செய்வான் என்று புரிய முடிகிறது.

**3) மனைவியின் வேலைகளில் அக்கறை காட்ட வேண்டும்**

மூன்றாவது முக்கிய விஷயம் வீட்டில் நடக்கும் பல வேலைகளைப் பற்றி பொதுவாக ஆண்கள் சிந்திப்பதோ கவலைப்படுவதோ இல்லை. ஆனால் பெண்களுக்குக் குறிப்பாக சில காரியங்கள் இருக்கின்றன. அவற்றில் அவர்களுக்கு சௌகரியங்களும் வசதிகளும் தேவைப்படும். அது போன்ற வேலைகளில் ஆண்கள் கொஞ்சமாவது அக்கறை காட்ட வேண்டும். குறைந்தது உங்கள் மனைவி தினமும் வேலை செய்து கொண்டிருக்கும் இடமான சமயலறையில் கொஞ்சம் நின்று சுத்தம் செய்யுங்கள். அல்லது இந்த காரியத்தை நன்றாக செய்துள்ளாய் என்று சொல்லுங்கள். உங்கள் மனதில் படும் ஆலோசனைகளை நீங்களாகவே கூறுங்கள். இதை உங்கள் வழக்கமாக ஆக்கிக் கொள்ளுங்கள்.

நீங்கள் கொஞ்சம் அக்கறை எடுத்துக் கொண்டால் "என் வேலைகளை அவர் பிரியப்படுகிறார். என் விஷயத்தில் அக்கறை கொள்கிறார். கவனம் செலுத்துகிறார். எனவே தான் எனக்கு இந்த விஷயங்களில் ஆலோசனை சொல்கிறார்" என்று உங்கள் மனைவி உணர்வாள்.

**புத்திசாலி கணவர்**

ஒரு நல்ல புத்திசாலியான விபரமான ஒருவர் வீடு கட்ட முடிவு செய்தார். வீட்டின் முழு அமைப்பையும் மனைவியின் விருப்பத்திற்கு விட்டுவிட்டார். நீ எப்படி விரும்புகிறாயோ அப்படித் தான் வீடு கட்டுவேன். ஆனால் ஒரு விஷயம் மட்டும் என் பொறுப்பு என்றார். அது என்ன? என்று மனைவி கேட்க கிட்ச்சன் மட்டும் என் இஷ்டப்படி கட்டுவேன் என்றார். அது பெண்களுக்குரியதாயிற்றே! என்றாள் மனைவி. அதனால் தான் அதை நான் திட்டமிடுகிறேன். ஏனென்றால் நீ அங்கே தான் அதிகமான நேரம் இருக்கிறாய். அதனால் உனக்கு சகல வசதிகளையும் ஏற்படுத்திக் கொடுப்பது என் பொறுப்பல்லவா? என்று கேட்டார். இங்கு இரண்டே வாக்கியத்தின் மூலம் மனைவிக்கு பெரும் ஆறுதல் கிடைத்துவிட்டது. நான் நாள் முழுக்க வேலை செய்ய வேண்டிய சமயலறையை என் கணவர் தன் விருப்பத்திற்கேற்ப கட்டித் தருவதாக கூறுகிறார். உனக்கு தேவையான ஒவ்வொரு பொருளையும் கவனத்தில் கொள்வேன் என்கிறார் என்று ஒரு நிம்மதி ஆறுதல் கிடைக்கிறது.

இவ்வாறே முழு வீடும் கட்டி முடிக்கப்பட்டது. கிட்ச்சனின் சாமான்களை மட்டும் கணவன் தானே வாங்கி வந்தார். மனைவிக்காக முழு சௌகரியங்களுடன் கிட்ச்சனை கச்சிதமாக கட்டி முடித்தார். அந்த வீட்டில் மனைவி எப்பொழுதெல்லாம் கிட்ச்சனில் நுழைவாளோ அப்பொழுது அவளுக்கு அங்குள்ள பொருள்களைப் பார்த்து மகிழ்ச்சி ஏற்படுகிறது.

எனவே வீட்டின் வேலைகளில், குறிப்பாக பெண்கள் மட்டுமே செய்யக்கூடிய சமையல் வேலைகளில் ஆண்கள் கொஞ்சமாவது அக்கறை காட்ட வேண்டும். ஏதாவது தேவை இருக்கிறதா என்று கேட்டு அதை வாங்கிக் கொடுக்க வேண்டும். அதன் மூலம் 'என் கணவர் என் தேவைகளை, தேவை என்றும் என் கஷ்டத்தை, கஷ்டம் என்றும் உணர்கிறார். எனக்கு வசதிகள் செய்து தர முடிந்த அளவு முயற்சிக்கிறார்' என்று மனைவி ஆறுதல் அடைவாள். நீங்கள் இவ்வாறு மனைவியின் வேலைகளில் பங்கெடுத்துக் கொள்வதால் மனைவியின் மனதில் மகிழ்ச்சி ஏற்படும். என் கணவர் என் வேலைகளை கவனிக்கிறார். குறைந்த பட்சம் எனக்கு உதவியும் ஒத்தாசையும் செய்கிறார். அவரது மேற்பார்வை கிடைக்கிறது என்று சந்தோஷப்படுவாள்.

இதனால் மனைவியின் மனதில் கணவனின் மீதுள்ள அன்பு அதிகரிக்கும். மனைவியின் தேவைகளை கணவன் கவனிக்கத் தவறினால் அதை நிறைவேற்ற வானத்திலிருந்து ஜிப்ரயீல் (அலை) அவர்கள் வரமாட்டார்கள். தேவை கணவனுக்குத் தான், கடமையும் அவனுக்குத் தான்.

**மனைவிக்கு உதவி செய்தல்**

ஹள்ரத் மூஸா (அலை) அவர்கள் அல்லாஹ்வின் தூதுவராக இருக்கிறார்கள். அவர்களின் மனைவி உடல்நிலை சரியில்லாமல் குளிரில் நடுங்கிக் கொண்டிருந்தார்கள். அப்பொழுது மூஸா (அலை) அவர்கள் நெருப்பு தேடச் சென்றார்கள். அல்லாஹ் அவர்கள் மீது நேசம் கொண்டு நபித்துவம் கொடுத்து அனுப்பிவைத்தான். நபிமார்கள் கூட மனைவியின் தேவைகளை பூர்த்தி செய்திருக்கிறார்கள் என்பதைப் பார்க்கிறோம். நாமும் நமது இறைவனின் அன்பைப் பெற வேண்டுமானால் நாமும் நமது மனைவியின் தேவைகளை பூர்த்தி செய்ய வேண்டும்.

***மனைவி என்பவள் கணவனுக்காக தன் பெற்றோர், சகோதரர்கள், உறவினர்கள் அனைவரையும் விட்டுவிட்டு வந்தவள். இப்பொழுது கணவனும் அவளது தேவைகளை கவனிக்கவில்லை என்றால் பிறகு உலகில் அவளுக்கு யார் தான் இருக்கிறார்கள்?***

**வீட்டு வேலை செய்வது சுன்னத்**

நபி ﷺ அவர்கள் சில சமயங்களில் வீட்டில் மாவு குழைப்பார்கள். மனித சமுதாயத்திற்கு தீனைக் கற்றுக் கொடுக்க வந்த, அல்லாஹ்வின் நேசர் நபி ﷺ அவர்கள் வீட்டில் மாவு குழைத்தார்கள் என்றால் இது சாதாரண விஷயமல்ல. மாறாக இதில் கணவன்மார்களுக்கு "மனைவியின் தேவைகளை தேவைகளாக கருதுங்கள்" என்ற பெரிய (Message) தகவல் இருக்கிறது. இதனால் நீங்களும் உடனே வீட்டிற்குச் சென்று ரொட்டி சுடுங்கள் என்று நான் சொல்லவில்லை. மாறாக நான் சொல்வதெல்லாம், சமையலறை வேலைகள் சரியாக நடக்கின்றன என்றால் குறைந்தது இரண்டு வார்த்தை "மாஷா அல்லாஹ்! இந்த காரியத்தை நன்றாக செய்திருக்கிறாய்" என்று சொல்லுங்கள். பொதுவாக ஆண்கள் இதனை கவனிப்பதே இல்லை. இதனால் தினமும் பெண்களுக்கு சிக்கல் தான். உதாரணமாக வீட்டில் இன்ன பொருள்

இல்லை சமைக்கும் போது எனக்கு தேவைப்படுகிறது என்று மனைவி கூறுகிறாள். நீங்கள் அதை வாங்க மறந்துவிட்டீர்கள். பலமுறை ஞாபகமூட்டியும் பல நாட்களாக நீங்கள் அதை வாங்கி வரவில்லை என்றால் இவருக்கு வீட்டு வேலைகளில் அக்கறையே இல்லை என்று உங்கள் மனைவி நினைப்பாள். அதே நேரத்தில் சமையலறையில் அத்தியாவசிய பொருட்களை தேவையான நேரத்தில் வாங்கி வாருங்கள். அதில் கவனம் செலுத்துங்கள். அதனால் மனைவியின் மீது நல்ல தாக்கம் ஏற்படுவதைப் பார்ப்பீர்கள்.

**நபி ﷺ அவர்களின் உதவி**

நபி ﷺ அவர்களின் அன்பு மகள், சுவனப் பெண்களின் தலைவி ஹள்ரத் ஃபாத்திமா (ரலி) அவர்கள் தங்கள் வீட்டில் ரொட்டி சுட்டுக் கொண்டிருக்கும் போது நபி ﷺ அவர்கள் வீட்டிற்கு வந்தார்கள். ரொட்டி சுட்டுக் கொண்டிருந்த ஃபாத்திமா (ரலி) அவர்களை பார்த்து ஃபாத்திமா! ரொட்டி சுடுகிறாயா? உனக்கு நானும் ஒரு ரொட்டி சுட்டுத் தருகிறேன் என்று கூறிய நபி ﷺ அவர்கள் மாவை உருண்டை பிடித்து, பரத்தி ஹள்ரத் ஃபாத்திமா (ரலி) அவர்களிடம் கொடுத்து இதை (தன்னூர்) அடுப்பில் சுடும்படி கூறினார்கள். அவர்களும் அடுப்பில் அதை சுட்டார்கள்.

அல்லாஹ்வின் நேசத்திற்குரிய நபி ﷺ அவர்கள் தன் மகள் வேலை செய்வதைப் பார்த்து தாங்களும் அதில் பங்கெடுத்து ஒரு ரொட்டிக்கு மாவு பரத்திக் கொடுத்திருக்கிறார்கள். இது சாதாரணமான விஷயமாகத் தெரியலாம். ஆனால் இதில் பெரிய மனோதத்துவம் இருக்கிறது. ஹள்ரத் ஃபாத்திமா (ரலி) அவர்களுக்கு எவ்வளவு மகிழ்ச்சி ஏற்பட்டிருக்கும் என் தந்தை என் வீட்டிற்கு வந்து என்னுடன் சிறிது நேரம் அமர்ந்திருந்தார்கள். எனக்காக வேலையும் செய்து கொடுத்தார்கள் என்று அளவற்ற மகிழ்ச்சி அடைந்திருப்பார்களல்லவா!

**பிறகு அங்கே என்ன நடந்தது...?**

சிறிது நேரத்தில் ஹள்ரத் ஃபாத்திமா (ரலி) அவர்கள் அனைத்து ரொட்டிகளையும் தயார் செய்து விட்டார்கள். பிறகும் அடுப்பையே திரும்பத் திரும்பப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். மகளே! என்ன பார்த்துக் கொண்டிருக்கிறாய்? என்று நபி ﷺ அவர்கள் கேட்டார்கள்.

**நபி ﷺ அவர்கள் கை பட்ட மாவு**

அல்லாஹ்வின் தூதரே! ஒரு ரொட்டி மட்டும் வேகாமல் பச்சை மாவாகவே இருக்கிறது என்று ஃபாத்திமா (ரலி) பதில் சொன்னார்கள். அதற்கு நபி ﷺ அவர்கள், மகளே! என் கைபட்ட மாவை நெருப்பு எரிக்காது என்று சிரித்துக் கொண்டே கூறினார்கள். அல்லாஹ்வின் பிரியத்திற்குரிய நபி ﷺ அவர்கள் தன் மகளின் வேலைகளில் இந்தளவு பங்கெடுத்து செய்திருக்கும் போது மகளுக்கு இதன் மூலம் எவ்வளவு ஆறுதல் கிடைத்திருக்கும் என்பதை சிந்தித்துப் பாருங்கள்.

**அன்பில் சிறந்த மகளார்**

இதன் விளைவாக மகளுக்கு தந்தையின் மீது அளவு கடந்த அன்பு ஏற்பட்டிருந்தது. தந்தையும் மகள் மீது மதிப்பு, மரியாதையும் கொண்டிருந்தார்கள். மகள் வந்துவிட்டால் நபி ﷺ அவர்கள் எழுந்து நின்று வரவேற்பார்கள். ஒரு முறை நபி ﷺ அவர்கள் வீட்டில் இருந்த சமயம் ஃபாத்திமா (ரலி) அவர்கள் வந்தார்கள். யா ரஸூலல்லாஹ்! பல நாட்களாக எங்கள் வீட்டில் பசி, பட்டினியின் நிலை இருந்தது. இன்று ஹள்ரத் அலீ (ரலி) அவர்கள் சிறிதளவு பணம் கொண்டு வந்தார்கள். அதில் மாவு வாங்கி ரொட்டி சுட்டேன். ஒரு ரொட்டி எனக்காக, ஒன்று அலி (ரலி) அவர்களுக்காக மேலும் ஒன்று பிள்ளைகளுக்காக என்று எடுத்து வைத்தேன்.

என் பங்கு ரொட்டியை நான் சாப்பிட ஆரம்பித்த போது ஃபாத்திமா! நீ ரொட்டி சாப்பிடுகிறாய் அங்கே உன் தந்தைக்கு சாப்பிட ஏதாவது கிடைத்ததா? இல்லையா? என்று தெரியவில்லையே என்று உள் மனம் கேட்டது. யா ரஸூலல்லாஹ்! நான் பாதி ரொட்டியை சாப்பிட்டு விட்டு மீதியை தங்களுக்காக என் போர்வையின் ஓரத்தில் கட்டி எடுத்து வந்துள்ளேன் என்றார்கள். ஹதீஸில் வருகிறது நபி ﷺ அவர்கள் அந்த பாதி ரொட்டியை வாங்கினார்கள். அதிலிருந்து ஒரு துண்டை சாப்பிட்டு விட்டு, என்னருமை மகளே! என் உயிர் எவன் வசமிருக்கிறதோ அந்த அல்லாஹ்வின் மீது சத்தியமாக இந்த மூன்று நாட்களில் இந்த ரொட்டித் துண்டு தான் என் முதல் உணவு என்றார்கள்.

தந்தை எந்தளவு அன்பைப் பொழிந்தார்களோ அதே அளவு அன்பை மகளும் பொழிந்தார்கள். அல்லாஹ் இப்படிப்பட்ட மகளை அனைவருக்கும் தருவானாக.

இங்கே நான் கூற வந்த விஷயம் பெண்களின் வேலைகளில் பங்கெடுப்பது பார்ப்பதற்கு சாதாரணமாக தெரியலாம். ஆனால் அதற்குப் பின்னால் மிகப் பெரிய மனோதத்துவம் புதைந்திருக்கிறது. நீங்கள் அவர்களுடன் கொஞ்சம் உதவி ஒத்தாசை செய்புங்கள். அல்லது இரண்டு வார்த்தைகள் கூறுங்கள். பிரியத்துடன் அவர்களின் வேலைகளைப் பாருங்கள். சமயலறையைப் பார்த்து சந்தோஷத்தை வெளிப்படுத்துங்கள் அதனால் அவர்களின் மனதில் என் கணவர் என் வேலைகளை கண்டு மகிழ்ச்சி அடைகிறார் என்ற ஆறுதல் உண்டாகும். இதனால் உங்கள் மீது அன்பு பெருகுவதை நீங்கள் பார்க்க முடியும்.

**4) மனைவிக்கு அன்பளிப்புகளை வழங்குங்கள்**

கணவன் கையாள வேண்டிய நான்காவது முக்கிய விஷயம் கணவன் தன் மனைவிக்கு அவ்வப்போது அன்பளிப்புகளை வழங்க வேண்டும். நாம் அனுபவத்தில் பார்க்கிறோம். பெண் பேசி முடித்து திருமணத்தை எதிர்ப்பார்த்து இருக்கும் போது மணப்பெண்ணிற்கு மணமகன் அன்பளிப்புகளை மழையாக பொழிகின்றான். ஆனால் நிக்காஹ் முடிந்த பிறகு வருடக்கணக்கில் அன்பளிப்பு தரலாம் என்ற எண்ணமே வருவதில்லை. இது மிகப்பெரிய தவறு.

பொதுவாக மனைவிக்குத் தேவையான பொருட்களை அடிக்கடி வாங்கித்தர வேண்டி இருக்கிறது. எனவே அவள் கேட்பதற்கு முன்பே நீங்களாக அவளுக்கு என்ன பொருள் தேவையிருக்கிறது அவள் என்ன விரும்புவாள் என்று யோசித்துப் பார்த்து நீங்களாக வாங்கிச் சென்று கொடுங்கள். உங்கள் அன்பு மனைவியின் மகிழ்ச்சிக்கு எல்லலையே இருக்காது.

*வாங்கித் தரத்தான் வேண்டும் என்பதை மனைவி சண்டை செய்து பின்னர் வாங்கித் தருவதால் என்ன பிரயோஜனம்? மனைவி பலமுறை கேட்டு வாங்கினால் அதில் எந்த பிரதிபலிப்பும் இருக்காது. அவள் சண்டையிட்ட பிறகு ஆடை வாங்கித் தருகிறீர்கள். நகை செய்து தருகிறீர்கள். இவ்வாறு நீங்கள் ஆயிரக்கணக்கில் செலவு செய்தாலும் அதில் எந்த பிரதிபலிப்பையும் எதிர்பார்க்க முடியாது. ஆனால் அவள் வாய் திறந்து கேட்காமலேயே உங்கள் பிரியத்தில் நீங்களாக ஒரு சாதாரணப் பொருளை அவளுக்கு அன்பளிப்பு செய்யுங்கள். அதை அவள் பெரும் பொக்கிஷமாக கருதுவாள்.*

**அன்பளிப்பு கொடுப்பது சுன்னத்**

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: تهادوا تحابّوا அன்பளிப்புகளை ஒருவருக்கொருவர் பரிமாறிக் கொள்ளுங்கள். உங்களிடையே அன்பு அதிகமாகும். ஆண்கள் மட்டும் தங்களுக்கிடையே அன்பளிப்புகளை பரிமாறிக் கொள்ள வேண்டும் என்பது கருத்தல்ல. மாறாக மனைவி என்பவள் வாழ்க்கைத் தோழியாவாள் அவளுக்கும் அன்பளிப்புகள் வழங்க வேண்டும். நபி ﷺ அவர்கள் "அன்பளிப்புகளை பரிமாறுங்கள். அன்பு அதிகரிக்கும்" என்று இரண்டே வார்த்தைகளில் ஒரு முக்கிய விஷயத்தை சுட்டிக் காட்டிவிட்டார்கள். கணவன், மனைவிக்கு மத்தியில் அன்பு தானே நோக்கமாக இருக்கிறது. எனவே கணவன் தன் மனைவிக்கு சிறிய பொருள்களையாவது அன்பளிப்பாக வழங்க வேண்டும்.

**It is not the thing which count it is thout**

பொருள்களை இங்கே பார்ப்பதில்லை. மாறாக எதன் காரணமாக அன்பளிப்பு வழங்கப்பட்டதோ அந்த எண்ணத்தைத் தான் பார்க்கப்படும்.

**கணவனின் அன்பளிப்பை மனைவி மறப்பதில்லை**

நீங்கள் கொடுக்கும் பொருள் விலை உயர்ந்ததா அல்லது மலிவானதா? என்பதை மனைவி பார்க்க மாட்டாள். என் கணவர் எனக்கு அன்பளிப்பு வாங்கித் தந்துள்ளார் என்று தான் அவள் யோசிப்பாள். அன்பளிப்புகள் விலை உயர்ந்தவையாக இருக்க வேண்டிய அவசியமில்லை. சாதாரண பொருளும் அன்பளிப்பாக ஆக முடியும். எனவே ஏதாவது பொருளை அன்பளிப்பாக வழங்கி வருவது வீட்டில் அன்பு பெருக காரணமாகும்.

ஒருவர் தன் மனைவியை ஓரிடத்திற்கு அழைத்துச் சென்றார். அங்கே நகைகள் அணிந்து செல்வது பாதுகாப்பில்லை. எனவே மனைவியும் நகைகளை அணியவிரும்பவில்லை. கணவனும் வேண்டாம் என்று கூறிவிட்டார். மனைவி அனைத்து ஆபரணங்களையும் களைந்து விட்டாள். பிறகு ஒரு செயினை மட்டும் எடுத்து, திரும்பவும் கழுத்தில் அணிந்து கொண்டு இதை மட்டும் கட்டாயம் அணிந்து கொண்டுதான் வருவேன் என்றாள். என்ன காரணம்? என்று கணவன் கேட்ட போது, நீங்கள் மறந்து விட்டீர்கள்.

திருமணத்திற்குப் பின் முதல் இரவில் நீங்கள் அணிவித்த செயின் இது. நான் அதை விட்டும் பிரிய மாட்டேன். எல்லா நகைகளையும் நான் கொடுத்து விடுவேன். ஆனால் இது என் நெஞ்சோடு தான் இருக்கும். இது நீங்கள் முதல் சந்திப்பில் வழங்கியது. இதில் உங்கள் பிரியம் இருக்கிறது என்றாள். இதன் மூலம் மனைவி தன் கணவனின் அன்பளிப்பிற்கு எவ்வளவு மதிப்பளிக்கிறாள் என்பதைப் புரிய முடிகிறது. அந்த பொருள் சாதாரணமானதாக இருந்தாலும் அதில் கலந்துள்ள அன்பு அதன் மதிப்பைப் பன்மடங்கு உயர்த்தி விடுகிறது.

மனைவிக்கு கணவனின் அன்பு மட்டும் தேவை. நகைகள் அணிந்து அழகு பார்ப்பது மட்டுமா அவளுக்குத் தேவை? அல்லது வீட்டுப் பொருள்களை சேர்த்து எங்காவது எடுத்துப் போக வேண்டிய தேவை இருக்கிறதா? இல்லவே இல்லை. மாறாக அவளுக்கு ஒவ்வொரு பொருளிலும் அன்பே பிரதானம். அவர்களுக்கு கணவன் மீது பிரியம் ஏற்பட்டுவிட்டால் அனைத்து பொருள்களிலும் கணவனின் பிரியம் மட்டுமே கண்ணுக்குத் தெரியும். எனவே நீங்களும் உங்கள் மனைவிக்கு அவ்வப்போது அன்பளிப்புகளை வழங்குங்கள். அந்த அன்பளிப்பு பரஸ்பரம் அன்பு ஏற்படக் காரணமாக அமையும்.

**ஒரே கல்லில் இரண்டு மாங்காய்**

மனிதன் தன் மனைவி மக்களுக்காக செலவு செய்வது தான் மிகச் சிறந்த ஸதகா என்று ஹதீஸில் கூறப்பட்டுள்ளது. தன் மனைவிக்கு ஒரு பொருளை வாங்கிக் கொடுப்பதில் கிடைக்கும் நன்மை அல்லாஹ்வின் பாதையில் செலவு செய்வதிலும் கிடைக்காது என்று உலமாக்கள் எழுதியுள்ளனர்.

ஆக மனிதன் செய்யும் ஸதகாக்களில் சிறந்த ஸதகா தன் மனைவி மக்களுக்காக செலவிடுவது தான் என்றிருக்கும் போது இந்த சிறிய அன்பளிப்பு மனைவிக்கு மட்டும் பிரியமானதல்ல. மாறாக அது அல்லாஹ்விற்கும் பிரியமானதாகிவிடுகிறது என்று விளங்க முடிகிறது. என் அடியான் தன் வீட்டை அன்பின் ஆலயமாக்குகிறான். நான் சேர்ந்து வாழ கட்டளையிட்ட உறவுகளுடன் சேர்ந்து வாழ்வதற்காக செலவு செய்கிறான் என்று அல்லாஹ்வும் மகிழ்ச்சி அடைகிறான்.

சிந்தித்துப் பாருங்கள்! அல்லாஹ், உறவு முறையைச் சேர்ந்து வாழும்

படி கட்டளையிட்டுள்ளான். மனைவிதான் நம் வாழ்க்கைத் துணைவி. எனவே அவள் தான் சேர்ந்து வாழ வேண்டிய உறவில் முன்னுரிமை கொடுக்க மிகப் பொருத்தமானவள். எனவே அவளுக்கு அன்பளிப்பு வழங்கியதால் ஒரு பக்கம் அல்லாஹ் சந்தோஷமடைகிறான். மறுபக்கம் மனைவி மகிழ்ச்சி அடைகிறாள். மனைவி மகிழ்ச்சியடைவதால் கணவனுக்கு பெரும் மகிழ்ச்சி ஏற்படுகிறது. மனிதன் கொடுத்தது குறைவு தான். ஆனால் அவனுக்கு திரும்பக் கிடைத்ததோ மிக அதிகம்.

விபரமான கணவன்மார்கள் இந்த காரியத்தை கச்சிதமாக செய்து வருவார்கள். ஏனெனில் இதனால் மனைவியின் அன்பு கிடைப்பது மட்டுமின்றி அல்லாஹ்வின் கட்டளையும், அன்பளிப்புகளை பரிமாறுங்கள்! அன்பு அதிகரிக்கும் என்னும் நபி ﷺ அவர்களின் அன்புக் கட்டளையும் நிறைவேற்றப்படுகிறது. இதைத் தான் ஒரே கல்லில் இரண்டு மாங்காய் என்பார்கள். அல்லாஹ், ரஸூலின் அன்பு கிடைப்பது ஒரு மாங்காய். மனைவியின் பிரியம் கிடைப்பது இரண்டாவது மாங்காய்.

**அன்பைப் பரப்ப வந்த மார்க்கம் இஸ்லாம்.**

இந்த காரியத்தை அல்லாஹ்வின் கட்டளை என்றும் நபி அவர்களின் சுன்னத் என்றும் அடிக்கடி செய்து வாருங்கள். இதன் மூலம் வீட்டிலிருந்து சண்டை சச்சரவுகள் வெளியேறிவிடும். ஷைத்தானிய பழக்க வழக்கங்களும் எல்லா நேரமும் கருத்து வேறுபாடு கொள்வதும் மறைந்து விடும். எந்த வீட்டில் கணவன், மனைவி இருவரும் ஒருவரை ஒருவர் சதாவும் ஏசிப்பேசிக் கொள்கின்றனரோ அங்கே அல்லாஹ்வின் ரஹ்மத்துகள், அருட்கொடைகள் எங்கிருந்து வரும்?

உள்ளத்தை திறந்து வைத்துக் கவனமாகக் கேளுங்கள். அல்லாஹு தஆலா நபி ﷺ அவர்களுக்கு லைலத்துல் கத்ர் எந்த இரவு என்பது பற்றிய விளக்கத்தை அருளினான். நபி ﷺ அவர்கள், இன்ன இரவு தான் லைலத்துல் கத்ர் என்று இந்த உம்மத்திற்கு அறிவிப்பதற்காக வீட்டிலிருந்து வெளியே வந்து, மஸ்ஜிதுந் நபவியை நோக்கி நடந்து கொண்டிருக்கும் போது தெருவில் இரு ஸஹாபிகள் ஏதோ ஒரு விஷயத்திற்காக சண்டையிட்டுக் கொண்டிருந்தார்கள்.

நபி ﷺ அவர்கள் அவ்விருவரின் அருகாமையில் கடந்து செல்லும் போது சண்டையிடும் சப்தம் காதில் விழுந்த உடனேயே லைலத்துல் கத்ர் பற்றிய குறிப்பு மறக்கடிக்கப்பட்டது. இருவரின் வாக்குவாதம் இந்த உம்மத்திற்கு லைலத்துல் கத்ர் பற்றிய குறிப்பு கிடைப்பதைத் தடுத்துவிட்டது என்று நபி ﷺ அவர்கள் கூறினார்கள்.

சிந்தித்துப் பாருங்கள்! இருவரின் வாக்குவாதம் இவ்வளவு பெரிய ரஹ்மத்தை இழக்கச் செய்துவிட்டது என்றால், எந்த வீட்டில் அனுதினமும் தவறாமல் கணவன், மனைவி அல்லது மாமியார், மருமகள் சண்டையிட்டுக் கொண்டே இருப்பார்களோ அந்த வீட்டில் அல்லாஹ்வின் ரஹ்மத்துகள் எப்படி வரும்? எனவே நாம், நம் வீடுகளை பண்பின் பாசறையாக ஆக்க வேண்டும். இவைதான் இஸ்லாத்தின் தனிச் சிறப்புகள். இது இயற்கை மார்க்கம். எந்த வீட்டில் இஸ்லாம் உயிரோட்டத்துடன் இருக்குமோ அங்கே நபி ﷺ அவர்கள் காட்டித்தந்த பிரியம் நிறைந்த வாழ்க்கை உயிர் பெறும். ஏனெனில் இஸ்லாத்தின் நோக்கமே உலகம் முழுவதும் அன்பு, பாசம் பரவ வேண்டும் என்பது தான். இது பிரியத்தை அன்பை பகிர்ந்தளிக்கும் மார்க்கம். எனவே கணவன், மனைவி இருவரும் இஸ்லாமிய அடிப்படையில் வாழ்க்கையை கழிக்க வேண்டும்.

**5) மனைவி மீதுள்ள பிரியத்தை வெளிப்படுத்துதல்**

கணவனிடம் இருக்க வேண்டிய ஐந்தாவது முக்கியமான பண்பு, தன் மனைவியின் மீது தான் கொண்டுள்ள அன்பை, காதலை அவளுக்கு வெளிப்படுத்திக் காட்ட வேண்டும். மனைவியின் மீது கணவன் வைத்துள்ள அன்பைப் பிரதிபலிக்கும் பேச்சுக்களை பேச வேண்டும். அல்லது செயல்களை செய்ய வேண்டும்.

நாவினால் இரண்டு இனிப்பான வார்த்தைகளை கூறுவதன் மூலம் மனைவியின் உள்ளம் குளிர்ந்து விடும். என்னவர் உண்மையிலேயே என்னை நேசிக்கிறார் என்று உணர்வாள். கணவன்,மனைவிக்கு இப்படிப்பட்ட அன்பைப் பரிமாறிய பின்னரும் வீட்டை செழிப்பாக்காமல் இருக்க அவள் என்ன பைத்தியமா?

கைசேதத்திற்குரிய விஷயம் என்னவென்றால் நாம் இன்று வரை

நமது வீடுகளில் ஒரு சர்வாதிகாரியைப் போன்று தான் அடக்கி ஆள்கிறோம். பெரும் தீன்தாரிகள் கூட தங்கள் மனைவியிடம் மிக்க கடுமையாகவே நடந்து கொள்கின்றனர். இது முற்றிலும் தவறாகும். வீட்டில் அன்பு பாசம் தான் மிகைத்து நிற்க வேண்டும். இதனால்தான் ஸஹாபாக்கள் தங்கள் மனைவியருக்கு உணவு ஊட்டி விடுவார்கள் என்று ஹதீஸின் அறிவிப்புகள் கூறுகின்றன. சாப்பிடும் போது மனைவிக்கு ஊட்டி விடுவது சாதாரணமான விஷயமாகத் தோன்றுகிறது. ஆனால் அதில் காதலின் வெளிப்பாடு மறைந்துள்ளது.

**நபி ﷺ அவர்களின் ஸுன்னத்**

நபி ﷺ அவர்கள் வீட்டில் எவ்வளவு அன்பாக இருந்துள்ளார்கள். அல்லாஹ்வின் பாச நபியின் நேசத்திற்குரிய ஸுன்னத்தை ஆழ்மனதில் பதிய வையுங்கள். பொறுப்புணர்வுடன் இந்த ஹதீஸை உங்கள் முன் வைக்கிறேன். நபி ﷺ அவர்கள் ஒரு நாள் வீட்டிற்குள் வருகிறார்கள். ஹள்ரத் ஆயிஷா (ரலி) அவர்கள் பாத்திரத்தில் தண்ணீர் குடித்துக் கொண்டிருப்பதைப் பார்த்த நபி அவர்கள் ஹுமைரா! என்று அழைத்தார்கள். இது நபி ﷺ அவர்கள் ஹள்ரத் ஆயிஷா (ரலி) அவர்களை அழைக்கும் பிரியமான பெயர். (ஹுமைரா என்றால் செக்கச் சிவந்த சின்னப் பெண் என்று அர்த்தம்.)

இங்கே மற்றொரு விஷயம் தெளிவாகிறது. அதாவது கணவன் தன் மனைவியை இருவரும் விரும்பும் ஒரு பெயரை வைத்து அழைக்க வேண்டும். இதுவும் ஸுன்னத்து தான். இது கணவனின் அன்பைக் காட்டும் அறிவிப்புப் பலகை. இப்பெயர் வைத்து கணவன் அழைக்கும் பொழுதெல்லாம் மனைவிக்கு அன்பின் தூது (Message) கிடைத்துக் கொண்டே இருக்கும். இதனால் இருவரும் பிரியப்படும் பெயர் வைத்து அழைக்க வேண்டும். கேட்டவுடன் மனைவி சூடாகிவிடும் படியான வார்த்தையாக இருக்கக் கூடாது. இது ஸுன்னத்தல்ல; மாறாக பிறரைத் துன்புறுத்தும் பாவத்தில் கட்டுப்பட்டது. எனவே கணவனும் மனைவியும் விரும்பும் அழகிய பெயரால் மனைவியை அழைப்பது புனித ஸுன்னத்தாகும்.

அல்லாஹ்வின் பிரியத்திற்குரிய நபி ﷺ அவர்கள் ஹுமைரா என்று அழைத்தார்கள். அதற்கு "லப்பைக் யாரஸூலல்லாஹ்" என்ன செய்ய

வேண்டும் கூறுங்களேன்" என்று ஆயிஷா (ரலி) அவர்கள் கேட்டார்கள். நீ குடிக்கின்ற தண்ணீரில் சிறிதளவு எனக்காக மீதம் வைத்திரு! என்று நபி ﷺ அவர்கள் கூறினார்கள். இங்கு தான் சிந்திக்க வேண்டும். அங்கே தண்ணீருக்கு குறையில்லை. வேறு தண்ணீர் கிடைக்கும். ஆனால் இங்கே அன்பை வெளிப்படுத்தினார்கள். மனைவியுடன் இப்படி பிரியத்துடன் நடந்து கொள்ளுங்கள் என்று தன் உம்மத்திற்குக் கற்றுத் தருகிறார்கள்.

எனவே சிறிதளவு தண்ணீரை மிச்சப்படுத்தச் சொல்கிறார்கள். அடே! பெரியவர்கள் மீதமாக வைத்ததை பரக்கத்திற்காக குடிப்பது தான் பொதுப்பழக்கம். இங்கே ஓர் அதிசயம் பாருங்கள். எனக்காக மீதம் வையுங்கள் என்று மனைவியிடம் கூறுகிறார்கள். நபி ﷺ அவர்களில் தானே பரக்கத்துகள் சங்கமிக்கின்றன. அவர்கள் தானே ரஹ்மத்துல்லில் ஆலமீன், அவர்கள் தானே கணவர், அவர்கள் தானே வழி காட்டி, அவர்களில் தானே அனைத்து பரக்கத்துகளும் இருக்கின்றன என்றாலும் இங்கே முஹப்பத் தான் நோக்கம். எனவே ஆயிஷா (ரலி) அவர்களிடம் சிறிதளவு தண்ணீரை மிச்சப்படுத்த சொன்னார்கள். அவர்களும் மீதம் வைத்தார்கள்.

ஹதீஸில் வருகிறது நபி ﷺ அவர்கள் அருகில் வந்தமர்ந்தார்கள். தனது புனித கரத்தால் பாத்திரத்தை எடுத்து குடிக்க நினைத்து நிறுத்தி விட்டார்கள். ஹுமைரா! எந்த இடத்தில் நீ வாய் வைத்து குடித்தாய் என்று எனக்குக் காட்டு வாயா? எனக் கேட்டார்கள். ஹள்ரத் ஆயிஷா (ரலி) அவர்களும் ஓர் ஓரத்தைச் சுட்டி காட்டி யாரஸூலல்லாஹ்! நான் இந்த இடத்தில் தான் உதட்டை வைத்து குடித்தேன் என்றார்கள்.

அல்லாஹ்வின் பிரிய நபி ﷺ அவர்கள் உடனே பாத்திரத்தைத் திருப்பி அதே இடத்தில் தனது உதட்டை பதித்து தண்ணீர் அருந்தினார்கள். நபி ﷺ அவர்கள் அன்பை வெளிப்படுத்திய விதத்தைப் பாருங்கள்.

**தீன்தாரிகளின் கனிவான கவனத்திற்கு**

நாம் தீனை விளங்கவே இல்லை என்பது தான் கைசேதப்படத்தக்க விஷயம். இன்று நாம் நமது வெளிரங்கத்தை என்னவோ ஷரீஅத், சுன்னத் படி அமைத்துக் கொண்டிருக்கிறோம். ஆனால் வீட்டிற்குள் நுழைந்து விட்டால் நெருப்பாகி விடுகிறோம். பாவம்! மனைவியும் அரண்டு போய் விடுகிறாள்.

இதைத்தான் தீன் என்று நினைத்துக் கொண்டிருக்கிறோம். நாம் வெளியில் பெரிய ஆலிமாக, தீன்தாரியாக, பெரும் உபதேசியாக வலம் வருகிறோம். ஆனால் வீட்டில் மனைவி இரத்தக் கண்ணீர் வடித்துக் கொண்டிருக்கிறாள். இந்த மார்க்கப்பற்று என்ன பயன் தரப்போகிறது?

இதனால் தான் வெளியில் மட்டும் தீன்தாரிகளாக இருக்கும் பெரும்பாலானோரின் மனைவிமார்களிடம் தீனின் வாடை கூட இருப்பதில்லை. காரணமென்ன? இவர்களின் சொந்த நடவடிக்கைகளைப் பார்க்கிறார்கள். இவர்களிடம் சொல் மட்டுமே உண்டு செயல் இருப்பதில்லை. தீனைப் பற்றி வாய் கிழிய பேசுவார்கள். ஆனால் வீட்டில் தீன் படி வாழ மாட்டார்கள்.

அதனால் இந்த போலி தீன்தாரிகளின் மனைவிமார்கள் தங்கள் பிள்ளைகளுக்கு தீனைக் கற்பிப்பதில்லை. மாறாக தீனின் மீது வெறுப்பை ஏற்படுத்தி விடுகிறார்கள். இத்தகையவர்களை அவர்களின் மனைவியர் வெறுக்கின்றனர். ஏனெனில் தீனைப் பற்றி அதிகமாக பேசுகின்றனர். ஆனால் அவர்களிடம் நற்குணங்கள் பெயருக்குக் கூட இருப்பதில்லை.

**சிறிய சாதாரண விஷயத்திற்காக அவளை குழந்தைகளுக்கு முன்னால் தண்டிப்பது. அவளை அவமரியாதை செய்வது அவளை ஒரு பொருட்டாக கருதாமல் அவளது சுயமரியாதையைக் காயப்படுத்துவது போன்ற காரியங்களை வீட்டில் நாம் செய்வதால் வீட்டிற்குள் தீன் வருவது தடைபடும். வெளியில் நாம் முழு உலகிலும் தீனைப் பரப்புவோம். ஆனால் வீட்டிற்குள் தீனைக் கொண்டுவர முடியாது. எனவே கணவன்மார்களே! நபி ﷺ அவர்களின் இந்த புனிதமான சுன்னத்துகளைப் பற்றிப் பிடித்துக் கொள்ளுங்கள்.**

அல்லாஹ்வின் பிரிய நபி ﷺ அவர்கள், வீட்டில் அன்புடனும் பிரியத்துடனும் நடந்து கொண்டதன் விளைவாக வீட்டிற்குள் எந்தளவு தீனுடைய சூழ்நிலை ஏற்பட்டது என்றால், நபி ﷺ அவர்களே கூறினார்கள். என்னுடைய ஆயிஷாவே தீனின் பாதியாக இருக்கிறார்கள். கருத்தென்னவென்றால் தீனின் ஒரு பாதியான வெளிவாழ்க்கையை சஹாபாக்கள் அறிந்திருக்கிறார்கள். மறுபாதியான இல்லற வாழ்க்கையை என் மனைவிமார்கள் கற்றிருக்கிறார்கள். அவர்கள் அப்பாதியை உம்மத்திற்கு எத்தி வைத்தும் விட்டார்கள். ஆக மனிதன் தன் மனைவியிடம் இப்படி

பிரியத்துடன் நடந்து கொள்ளும் பொழுது மனைவி பாதி தீனாகி விடுகிறாள். எனவே நாமும் நம் மனைவியரின் மீதுள்ள பிரியத்தை வெளிப்படுத்திக் காட்ட வேண்டும்.

முஸ்லிம்கள் அல்லாஹ்வின் நேச நபி ﷺ அவர்களின் சுன்னத்தின் நிய்யத்துடன் மனைவியின் உள்ளத்தில் அன்பை ஏற்படுத்தும் காரியங்களை செய்து வந்தால் ஸுன்னத்தின் நன்மையும் கிடைக்கும். அத்துடன் வீட்டிற்குள்ளே அன்பு ஆட்சி செய்யும்.

**ஆக மனைவியின் மீதுள்ள அன்பை வெளிப் படுத்துவது முக்கிய வழிமுறைகளில் ஒன்று. இதனை ஆண்கள் தமது பலவீனம் என்று நினைக்கக் கூடாது. மாறாக தமது கண்ணியம் என்று கருத வேண்டும்.**

நான் என் மனைவியின் மீதுள்ள பிரியத்தை வெளிப்படுத்தினால் அவள் என் மீது அன்பு கொள்வாள் என்று நம்ப வேண்டும். பெரும்பாலான ஆண்கள், நாம் பியிரியத்தை சிறிது வெளிப்படுத்தினால் அவள் நம் தலையில் ஏறி உட்கார்ந்து விடுவாள் என்று நினைக்கின்றனர். இது தவறாகும். மனைவியை நடுநிலையில் வைக்க வேண்டியது கணவனின் கையில் தான் இருக்கிறது. அதே போல தலையில் ஏறி மிளகாய் அரைப்பவள் தீன்தாரி பெண்ணாக இருக்க மாட்டாள். தீனுள்ள பெண்கள், اَلرِّجَالُ قَوَّامُوْنَ عَلَى النِّسَاءِ ஆண்களே பெண்களை நிர்வகிக்கிறவர்கள் (4:34) என்ற வசனத்தை ஓதி இருப்பார்கள். எனவே கணவனின் பேச்சை கேட்டு நடப்பார்கள். எப்பொழுதும் கணவனை உயர்ந்த அந்தஸ்த்தில் வைத்திருப்பார்கள்.

**6) மனம் லயிக்கும் பேச்சுக்களை பேச வேண்டும்**

ஆறாவது முக்கிய பண்பு கணவன் தன் மனைவியிடம் மனம் லயிக்கும் படியான சந்தோஷமான விஷயங்களை பேச வேண்டும். இதுவும் அல்லாஹ்வின் புறத்திலிருந்து மனிதனுக்கு நன்மைகள் கிடைக்கக் காரணமாகும்.

**எப்பொழுதும் கடு கடுப்பாக இருக்க வேண்டும் என்று மார்க்கம் சொல்லவில்லை. நகைச்சுவையும் மனிதனின்இயற்கை சுபாவங்களில் ஒன்று. அதை கவனத்தில் கொள்ளவில்லை என்றால் நம்மைச் சுற்றி இருப்பவர்களின் உள்ளத்தில் தனிமை உணர்வும் வெறுப்பும் ஏற்படும்.**

**நபி ﷺ அவர்களின் சில நிகழ்வுகள்**

நபி ﷺ அவர்கள் ஒருமுறை ஹள்ரத் ஆயிஷா (ரலி) அவர்களுடன் அமர்ந்திருந்தார்கள். அப்பொழுது ஆயிஷா (ரலி) அவர்களைப் பிரியமான ஒரு பார்வைப் பார்த்து புன்சிரிப்பு சிரித்தார்கள். அல்லாஹ்வின் பிரியமான நபியே! ஏன் சிரிக்கிறீர்கள் என்று ஆயிஷா (ரலி) அவர்கள் கேட்க, ஆயிஷாவே! தேனுடன் பேரீத்தம் பழத்தைச் சேர்த்து சாப்பிடுவது பிரியமாக இருப்பது போல நீ எனக்கு பிரியமாக இருக்கிறாய் என்று நபி ﷺ அவர்கள் பதில் சொன்னார்கள். ஹள்ரத் ஆயிஷா (ரலி) அவர்களுக்கு பெரும் மகிழ்ச்சி ஏற்பட்டது. உடனே யாரஸூலல்லாஹ்! தேனுடன் வெண்ணையை சேர்த்து சாப்பிடுவது பிரியமாக இருப்பது போல நீங்கள் எனக்குப் பிரியமாக இருக்கிறீர்கள் என்று கூறினார்கள். இதைக் கேட்ட நபியவர்கள் புன்முறுவல் செய்தவர்களாக ஆயிஷா உனது பதிலும் அழகாகவே இருக்கிறது என்று பாராட்டினார்கள்.

ஆகவே மனைவியுடன் இது போன்ற அன்பான பேச்சுக்களையும் பேச வேண்டும். இப்படி பேசுவதும் வீட்டில் தீனுடைய சூழ்நிலை உருவாக கட்டாய தேவை என்று விளங்குகிறது. அவ்வாறில்லை என்றால் நபி ﷺ அவர்களும் அவர்களின் மனைவியும் இது போன்ற வார்த்தைகளைப் பரிமாறிக் கொள்ள வேண்டும் என்ற என்ன தேவை இருக்கிறது? இங்கே பாருங்கள் மனைவி தன் அன்பை எப்படி வெளிப்படுத்தியிருக்கிறார்கள். யாரஸூலல்லாஹ் தேனுடன் வெண்ணையை கலந்து சாப்பிடுவதை விட நீங்கள் எனக்குப் பிரியமானவர்கள் யதார்த்தத்தில் நாம் பார்க்கிறோம். உணவு விரிப்பில் தேனும் வெண்ணையும் இருந்தால் அனைவரின் கையும் அவற்றின் பக்கமே முன்னேறுகிறது. ஆக வீட்டில் மனைவியுடன் அமர்ந்திருக்கும் போது பிரியமான சில வார்த்தைகள் பேச வேண்டும்.

**ஓட்டப் பந்தயம் வைப்போமா...?**

நபி ﷺ அவர்கள் மனைவியுடன் நடந்து கொண்ட மனம் லயிக்கும் படியான இன்னொரு சம்பவத்தையும் உங்களுக்குக் கூறுகிறேன். நபி ﷺ அவர்கள் ஒரு முறை தன் மனைவியுடன் சுயதேவையைப் பூர்த்தி செய்ய வெளியில் சென்றார்கள். ஏனெனில் அன்றைய காலத்தில் வீடுகளில்

கழிப்பறை வசதி இருக்கவில்லை. வெளியே காடுகளில் செல்வார்கள். அதே போல நபி ﷺ அவர்கள் வெளியே ஒரு மைதானத்திற்கு வந்தார்கள். அப்பொழுது ஆயிஷா? உனக்கும் எனக்கும் ஓட்டப் பந்தயம் வைப்போமா? என்று கேட்டார்கள். பாருங்கள் அல்லாஹ்வின் நபி ﷺ அவர்களின் உள்ளத்தில் தான் அனைவரையும் விட அதிகமாக அல்லாஹ்வின் பயம் இருந்தது. அவர்கள் தான் உலகிலேயே மிகப்பெரிய வணக்கசாலியாகவும் உலக பற்றற்றவர்களாகவும் இருந்தார்கள். அவர்களின் உள்ளத்தில் அல்லாஹ்வின் மீது அசைக்க முடியாத நம்பிக்கை இருந்தது. எல்லா நற்பண்புகளும் அனைவரையும் விடவும் அவர்களிடமே அதிகமாக குடிகொண்டிருந்தன. ஆனால் அந்த நபி ﷺ அவர்கள், தன் மனைவியிடம் ஓட்டப்பந்தயம் வைக்கலாமா? என்று கேட்கிறார்கள். அவர்களும் சரி என்று சம்மதம் தெரிவித்தார்கள். இப்பொழுது நபி ﷺ அவர்கள் தன் மனைவியுடன் ஓட்டப்பந்தயம் நடத்தி அதில் தானாகவே மனைவியை முந்தி செல்லவிட்டார்கள். ஆயிஷா (ரலி) அவர்களும் சிறிது ஒல்லியாக இருந்த காரணத்தால் முந்தி விட்டார்கள். அவர்களுக்குள்ளே பெரும் மகிழ்ச்சி. யாரஸூலல்லாஹ் நான் முந்தி விட்டேனே! என்றார்கள். நபி ﷺ அவர்கள் மனைவியின் மகிழ்ச்சியை பார்த்து சந்தோஷப்பட்டார்கள். இங்கே மனைவியின் சந்தோஷமும் மகிழ்ச்சியும் தானே நோக்கம். பிறகு நபி ﷺ அவர்கள் வீடு திரும்பி விட்டார்கள்.

சிறிது காலம் கழிந்தது. ஒரு நாள் இரவு அதே போல் இஷாவிற்கு பிறகு வெளியே ஒரு மைதானத்திற்கு வந்தார்கள். இப்பொழுது ஹள்ரத் ஆயிஷா (ரலி) அவர்களின் உடலில் கொஞ்சம் சதைப் போட்டிருந்தது. நபி ﷺ அவர்கள் அதை நினைவில் கொண்டு ஆயிஷா! இன்று திரும்பவும் ஓட்டப்பந்தயம் வைக்கலாமா? என்று கேட்க, யாரஸூலல்லாஹ்! வாருங்கள் ஓடலாம் என்றார்கள். இந்த பந்தயத்தில் நபி ﷺ அவர்கள் முந்தி விட்டார்கள். ஆயிஷா! அன்று நீ ஜெயித்தாய். இன்று நான் ஜெயித்தேன். இரண்டும் சரி சமமாகிவிட்டது என்று பிரியத்துடன் கூறினார்கள். இப்பொழுது ஆயிஷா (ரலி) அவர்கள் இந்த தோல்வியையும் சந்தோஷமாக ஏற்றுக் கொண்டார்கள். அவர்களுக்கு ஜெயித்த போதும் மகிழ்ச்சி ஏற்பட்டது. தோற்ற போதும் மகிழ்ச்சி ஏற்பட்டது. இங்கே அன்பு தான் மிகைத்து நிற்கிறது.

ஒரு முறை நபி ﷺ அவர்கள் தன் மனைவி ஆயிஷா (ரலி) அவர்களுக்கு 9 பெண்களின் கதையைக் கூறினார்கள். அந்த 9 பெண்கள் உட்கார்ந்து தத்தமது கணவனின் குணங்களை வர்ணிக்க ஆரம்பித்தனர். அவர்களில் முதல் பெண் தன் கணவனைப் பற்றி இப்படிச் சொன்னாள். இரண்டாமவள் இப்படிச் சொன்னாள், மூன்றாமவள் இப்படிச் சொன்னாள். இப்படியாக நபி ﷺ அவர்கள் ஒன்பது பெண்களின் விஷயங்களை கூறிவிட்டு அவர்களில் எந்த பெண்ணின் கணவன் மிகச் சிறந்த பண்புகளைப் பெற்றிருந்தானோ அவனை விடச் சிறப்பாக நான் உன்னுடன் நடந்து கொள்வேன் என்று சொல்லி முடித்தார்கள்.

**நீங்கள் உங்கள் மனைவியை சந்தோஷப்படுத்த இது போல என்றாவது பேசியதுண்டா? நமக்கு அப்படிப்பட்ட பழக்கமே இல்லை. நம்மை சந்தோஷப்படுத்துவது தான் அவளது கடமை. அவளை சிரமப்படுத்துவது நமது கடமை என்று நாம் கூறுகிறோம். இது நியாயமா?**

**சில தீன்தாரிகளின் நிலை**

இன்று சில ஸூஃபிமார்களும் தீன் தாரிகளும் வீட்டில் அன்புடன் நேசத்துடன் இருப்பது பேசுவது அல்லாஹ்வின் தொடர்புக்கு தடையாக இருக்கும் என்று நினைக்கிறார்கள். அப்படியெல்லாம் இல்லை. இது அல்லாஹ்வின் நேச நபி ﷺ அவர்களின் ஸுன்னத்துகளாகும் நாமும் அப்படித் தான் வாழ வேண்டும்.

ஒரு ஸஹாபி நபி ﷺ அவர்களிடம் வந்தார். நபி ﷺ அவர்கள் ஹள்ரத் ஹஸன், ஹுஸைன் (ரலி) அவர்கள் இருவரையும் பிரியத்துடன் கொஞ்சிக் கொண்டிருந்தார்கள். அந்த மனிதர் பிரமித்துப் போனார். யாரஸூலல்லாஹ்! எனக்கு அதிகமான குழந்தைகள் இருக்கிறார்கள். நான் அவர்களில் யாரையும் முத்தம் கொடுத்து கொஞ்சியதே இல்லை என்றார். யாருடைய உள்ளத்தை அல்லாஹ் அன்பு, பாசத்தை விட்டும் தூரமாக்கி விட்டானோ அவரை நான் என்ன செய்ய முடியும்? என்று நபி ﷺ அவர்கள் கேட்டார்கள். ஆக அன்பு என்பது இயற்கையாகவே உள்ளத்தில் பிறக்கும் அல்லாஹ்வின் ஓர் அருட்கொடை என்று தெரிகிறது. எனவே மனைவியுடன் அன்பாக நடப்பது ஒரு பெண்ணுக்கு அடிமையாகிவிட்டதாக ஆகாது. மாறாக இது நபி ﷺ

அவர்களின் சுன்னத்தைப் பின்பற்றுவதாகும். இதன் மூலம் நீங்கள் உங்கள் வீட்டில் அன்பின் சூழலை உருவாக்குகிறீர்கள்.

சிந்தித்துப் பாருங்கள். நீங்கள் மனைவியை மகிழ்ச்சியாக வைத்திருக்கவில்லை என்றால் ஷைத்தான் எத்தனை பெரிய பாவங்களில் சிக்க வைத்துவிடுகிறான். மனைவி கணவன் மீதும் கணவன் மனைவி மீதும் பழிசுமத்துகின்றனர். இருவருக்கும் பிரச்சனைகளிலிருந்து விடுபட சந்தர்ப்பம் வாய்ப்பதில்லை. பிள்ளைகள் தர்பிய்யத்தின் வயதை கடந்து கொண்டிருக்கிறார்கள். பிள்ளைகளை தர்பிய்யத் செய்யவே இல்லை. இதனால் முழு சந்ததியும் குட்டிச் சுவராகிவிட்டது. இந்த முபாரக்கான ஸுன்னத்துகளை விடும் போது எவ்வளவு மோசமான பின் விளைவுகள் ஏற்படும் என்று சிந்தித்துப் பாருங்கள்!

**7) சகிப்புத் தன்மை அவசியம்**

கணவன் தன்னிடம் உருவாக்கிக் கொள்ள வேண்டிய ஏழாவது முக்கியப் பண்பு சகிப்புத் தன்மை. வீட்டில் ஏதாவது, தான் விரும்பாத விஷயம் நடப்பதைப் பார்த்தால் அல்லது மனைவியிடம் ஏதாவது குறைகள் தென்பட்டால் அவற்றைப் பொறுத்துக் கொள்ள வேண்டும். உதாரணமாக; துணிமணிகள் தயார் செய்ய வேண்டிய நேரத்தில் தயாராக வில்லை. உணவு சற்று தாமதமாகிவிட்டது. குழந்தைக்கான ஒரு வேலை செய்ய வேண்டி இருந்து அதை செய்யவில்லை என்றால் அதற்காக கோபப்படக் கூடாது. மனைவியும் ஒரு மனுஷிதான். அவள் நல்ல வேலைகள் பலவற்றை நமக்காக செய்கிறாள். சில சமயங்களில் இது போன்ற தவறுகள், குறைகள், சோம்பல் ஏற்படத்தான் செய்யும் என்று பெரிய மனதோடு ஏற்றுக் கொள்ள வேண்டும். எல்லா நிலையிலும் கணவன் பெரிய மனதுடன் நடந்து கொள்ள வேண்டும். சிறிய தவறுகளை மன்னித்து விட வேண்டும். ஏனெனில் மனிதன் எவ்வளவு பெரிய மனதுடன் நடந்து கொள்வானோ வீட்டில் அந்தளவு கண்ணியமுள்ளவனாகக் கருதப்படுவான்.

ஒரு தவறுக்கு பகரம் வாங்க முடியும், திட்டமுடியும், தண்டனை தர முடியும் என்றிருக்கும் சமயத்தில் மன்னித்து விட்டுவிட்டால் மன்னிக்கப்பட்டவரின் உள்ளத்தில் மன்னித்தவரின் அந்தஸ்து ஒருபடி

உயர்ந்துவிடும். எனவே சிறிய தவறு நடந்தால் உபதேசம் செய்யலாம். ஆனால் எப்பொழுதும் திட்டிக் கொண்டே இருக்கக் கூடாது. பிறகு திட்டுவதற்கு மரியாதையே இல்லாமல் போய்விடும். 'இவருக்கு எப்பொழுதும் இதே வேலைதான்; வேறு வேலையே இல்லை' என்று மனைவி நினைக்க ஆரம்பித்துவிடுவாள். எனவே தான் சிறுசிறு தவறுகளை கண்டு கொள்ளாமல் விட்டுவிட வேண்டும்.

உதாரணமாக உணவில் உப்பு கூடிவிட்டது. இது எல்லோருக்கும் ஏற்படவே செய்யும். கணவனை வீட்டு வேலை செய்யச் சொன்னால் அவன் ஒரு நாளைக்கு பத்து தவறுகள் செய்வான் என்று தான் நான் நினைக்கிறேன். அப்பொழுது மனைவி பத்துமுறை கணவனை தண்டிக்க வேண்டிவரும். ஆனால் அந்த அப்பாவிப் பெண்ணோ பத்தில் ஒன்பதை சரியாக செய்கிறாள். ஒன்று தப்பாகிவிட்டால் கணவன் மன்னிப்பதுமில்லை. எனவே தான் **To run a big show one should have a big heart** ஓர் அடியான் நல்ல முறையில் வீட்டை நிர்வாகம் செய்ய பெரிய மனம் தேவை.

சிறிய தவறுகளை பொறுத்துக் கொண்டு மன்னித்து விடுவதால் மனைவி, மக்களின் உள்ளத்தில் 'பாதுகாப்பு உணர்வு' அதிகம் ஏற்படுகிறது. அதனால் அவர்களிடம் அன்பும் அதிகரிக்கும். பிரியத்துடன் எடுத்துச் சொல்வதால் பெரிய பிரயோஜனம் கிடைக்கும். சில ஆண்களைப் பார்க்கிறோம். உணவில் சிறிது உப்பு கூடிவிட்டால் அல்லது காரம் குறைந்து விட்டால் சண்டையிடுகிறார்கள். சப்பாத்தி வேகவில்லை என்றால் பிரச்சனை பண்ணுகிறார்கள். இவர்கள் அடிமட்ட முட்டாள்கள் என்றே நான் கருதுகிறேன். இவர்களுக்கு வாழவே தெரியவில்லை. எனவே சிறிய விஷயங்களுக்காக சண்டையிடக் கூடாது. அவற்றை மன்னித்து விடுவது தான் அல்லாஹ்விற்கு மிகப் பிரியமானது.

**மன்னித்து விடுவதின் பிரதிபலன்**

மௌலானா யாகூப் (ரஹ்) அல்லது வேறு ஓர் இறைநேசரைப் பற்றி கிதாபில் படித்தேன். அவர்கள் மரணித்த பின் அவர்களை ஒருவர் கனவில் தரிசித்தார். அவர்கள் சுவர்க்கத்தின் பெரிய, பெரிய தோட்டங்களில் உல்லாசமாக உலவிக் கொண்டிருந்தார்கள். கனவில் பார்த்தவர், "ஹள்ரத்!

அல்லாஹ் உங்களின் எந்த அமலை பிரியப்பட்டு ஏற்றுக் கொண்டு சுவர்க்கம் அளித்தான்?" என்று கேட்டார். அதற்கு அவர்கள், எனது எந்த அமலும் முன் வைக்கப்படவே இல்லை. ஒரு முறை வீட்டில் கிச்சடி செய்யப்பட்டிருந்தது. அதில் சிறிதளவு உப்பு கூடிவிட்டிருந்தது. இதற்காக மனைவியை ஏன் திட்ட வேண்டும். அவளோ சிரமத்துடன் சமைத்திருப்பாளே! என்று எண்ணியவனாக தலைகுனிந்து அல்லாஹ்வின் நிஃமத் எனக் கருதி அதை சாப்பிட்டு முடித்தேன். அல்லாஹ்விற்கு எனது இச்செயல் பிடித்துப் போய் விட்டது. நீ எனது நிஃமத்திற்கு மதிப்பளித்த காரணத்தால் மென்மேலும் எனது நிஃமத்துகளைப் பெற தகுதிபெற்று விட்டாய் என்று கூறி சுவர்க்கத்தின் நிஃமத்துகளை வழங்கினான் என்றார்கள். இங்கு பாருங்கள்! சிறு சிறு விஷயங்களை பெரிது படுத்தாமல் பொறுத்துக் கொள்வதால் அல்லாஹ்விடம் எவ்வளவு பெரிய சன்மானம் கிடைத்திருக்கிறது.

**அவ்ரங்கசீப் (ரஹ்) அவர்களின் சகிப்புத் தன்மை**

அவ்ரங்கசீப் (ரஹ்) அவர்களின் வாழ்க்கைக் குறிப்பில் எழுதப்பட்டுள்ளது. ஒரு முறை அவர்களிடம் ஒரு சமையல்காரன் வந்தான். அவனது நோக்கம் மன்னருக்கு பணி விடை செய்தால் பெரும் சன்மானங்களைப் பெறலாம் என்பது தான். ஆனால் மன்னரோ தொப்பி தைத்து, குர்ஆன் எழுதி விற்று அந்த வருமானத்தில் வாழ்க்கையை கழித்துக் கொண்டிருந்தார்கள். பொது நிதியிலிருந்து ஒரு பைசா கூட எடுக்க மாட்டார்கள். ஏனெனில் அவர்கள், முஜத்தித் அல்ஃபஸானி (ரஹ்) அவர்களின் மகனாரின் சகவாசத்தில் இருந்து ஆன்மிகக் கல்வி பெற்றிருந்தார்கள். எனவே பெரிய சக்கரவர்த்தியாக இருந்தும் கூட ஓர் இறை நேசராகவே வாழ்ந்தார்கள். அவர்களின் வீட்டில் சாதாரண ரொட்டியும் கிச்சடியும் மட்டுமே சமைக்கப்படும். இதனால் புதிதாக வந்த சமையல்காரருக்கு சிரமம் ஏற்பட்டது. அங்கிருந்து எப்படியாவது தப்பிவிட வேண்டுமென திட்டமிடலானார்.

ஒரு நாள் உணவில் தாராளமாக உப்பைக் கொட்டினார். ஆனால் மன்னர் வந்து அமைதியாக சாப்பிட்டார்கள். எதுவும் சொல்லவில்லை. அவனுக்கு பெரிய ஆச்சரியம்! என்னடா இது! நம்மை வேலையிலிருந்து விலக்கிவிடுவார் என்று நாம் நினைத்தோம். ஆனால் இப்படி எதுவும்

சொல்லாமல் போய் விட்டாரே! ஒரு வேளை அதிகமாக உப்பு சாப்பிடுவதை பிரியப்படுவாரோ? அதனால் தான் உப்பு கூடியதைப் பற்றி எதுவும் கூறாமல் போய்விட்டார் என நினைத்தான். எனவே அடுத்த நாள் உப்பே போடாமல் சமைத்தான். ஆனால் அவ்ரங்கசீப் (ரஹ்) அவர்கள் அதையும் அமைதியாக சாப்பிட்டார்கள். ஒன்றும் சொல்லவே இல்லை. இவருக்கு ஒரே குழப்பம். மூன்றாம் நாள் அளவான உப்புடன் சமைத்தான். அன்று மன்னர் சாப்பிட்டு முடித்த பின் சமையல்காரரை அழைத்து என்னப்பா! முதல் நாள் உப்பு அதிகமாக இருந்தது. இரண்டாம் நாள் உப்பே இல்லாமல் இருந்தது. இன்று அளவாக இருக்கிறது. நீ உனக்கென்று ஓர் அளவை நிர்ணயம் செய்து தினமும் அதே அளவைச் சேர்த்துக் கொள். உனக்கு சமைப்பது இலகுவாகிவிடும் என்றார்கள். அதற்கு சமையல்காரர், ஹஜ்ரத்! எனக்கு விடுதலை கிடைக்க வேண்டும் என்று தான் இவ்வாறு செய்தேன். ஆனால் தாங்களோ உணவை குறை சொல்லவே இல்லை என்றார்.

அக்கால மன்னர் இப்படி இறை நேசர்களின் பண்பைப் பெற்றிருந்தார். உணவை அல்லாஹ்வின் அருட்கொடை என்றெண்ணி எவ்வித குறையும் கூறாமல் சாப்பிட்டு வந்திருக்கிறார்கள்.

**ஒரு ரொட்டித் துண்டு லட்சம் தீனார்களை விட மதிப்புமிக்கது**

அப்பொழுது அவ்ரங்கசீப் (ரஹ்) அவர்கள், உனக்கு உலக செல்வம் கிடைக்க வேண்டுமா? அதற்கு நான் ஏற்பாடு செய்கிறேன் என்று கூறி, தான் சாப்பிட்ட ரொட்டியின் ஒரு துண்டை மீதம் வைத்து, இதை இன்ன மனிதருக்கு என் அன்பளிப்பாக வழங்கி விடு! என்று அனுப்பி வைத்தார்கள். சமையல்காரர் அந்த ரொட்டித் துண்டை எடுத்துச் சென்று அந்த மனிதரிடம் அன்பளிப்பாக வழங்கினார். அந்த மனிதர் மன்னர் மீது மிகவும் மகிழ்ச்சியுற்றார். உடனே இலட்சம் தீனாரை எடுத்து சமையல்காரரிடம் கொடுத்து, மன்னரின் அன்பளிப்பை எடுத்து வந்த உனக்கு எனது அன்பளிப்பு என்று கூறி அனுப்பினார். அப்பொழுது அவ்ரங்கசீப் (ரஹ்) அவர்கள் பார்த்தாயா? ஒரு ரொட்டித் துண்டு இலட்சம் தீனார்களை விட மதிப்புள்ளது என்று கூறினார்கள். அப்பொழுது தான் இறைநேசர்களின் பார்வை எப்படிப்பட்டது என்று அவருக்கு புரிந்தது.

இச்சம்பவத்தை கூறியதன் நோக்கம், வீட்டில் இவ்வாறான சிறிய விஷயங்களுக்காக பிரச்சனைகளை உருவாக்குவது மடத்தனமாகிவிடும். அதனால் வீடே நாசமாகிவிடும். அத்துடன் நிம்மதியும் தொலைந்துவிடும். ஆகவே பெரியவர்கள், சிறியவர்களின் சிறு தவறுகளை மன்னித்திட வேண்டும். கணவனுக்கு அல்லாஹ் மிகப் பெரிய அந்தஸ்த்தை அளித்துள்ளான். எனவே சிறியவர்களின் குறைகளை பொறுத்து போவது தான் பெருந்தன்மைக்கு அடையாளம். நபி ﷺ அவர்களை விட அதிகம் மன்னிக்கக் கூடிய யாரையும் நாங்கள் பார்த்ததே இல்லை என்று ஸஹாபாக்கள் கூறுவார்கள். ஓர் அடியான் அல்லாஹ்விற்காக பிறரை மன்னித்தால் அல்லாஹ்வும் அவரது தவறுகளை மன்னிப்பான்.

**அடியார்களை நாம் மன்னித்தால் அல்லாஹ் நம்மை மன்னிப்பான்**

ஹள்ரத் தானவீ (ரஹ்) அவர்கள் ஒரு பிரபல்யமான சம்பவத்தை எழுதியுள்ளார்கள். ஒரு மனிதரின் மனைவி ஒரு பெரிய தவறு செய்துவிட்டாள். அதற்காக அவளை தண்டிக்கலாம். தண்டிக்கும் விதத்தில் தலாக்கும் கூறியிருக்கலாம். ஏனெனில் அவள் செய்தது அவ்வளவு பெரிய தவறு. ஆனால் அவர் தம் மனதில், தவறு என்னவோ செய்துவிட்டாள். ஆனாலும் அவளுக்குள்ளே தவறு செய்துவிட்டோமே என்ற குற்ற உணர்வும் இருக்கிறது. சரி, இந்த அல்லாஹ்வின் அடிமையை அல்லாஹ்விற்காக மன்னித்து விடலாம் என்று கூறிக் கொண்டார். அம்மனிதர் மரணித்த பிறகு அவர் சுவர்க்கத்தில் இருப்பதாக ஒருவர் கனவு கண்டார். சுவர்க்கத்தில் எப்படி நுழைந்தீர்கள்? என்று கேட்டார். அதற்கவர், நான் என் மனைவி தவறு செய்த போது அல்லாஹ்வின் அடிமை என்று நினைத்து மன்னித்துவிட்டேன். அதற்கு அல்லாஹ் என் அடிமை என்று நினைத்து எனது ஓர் அடிமைப் பெண்ணை நீ மன்னித்தாயே அதற்குப் பகரமாக இன்று உன்னையும் என் அடிமை எனக் கருதி நான் மன்னிக்கிறேன் என்று கூறி கேள்வி கணக்கின்றி சுவனம் புகச் செய்துவிட்டான் என்று பதில் கூறினார்.

எனவே மனிதன் பிறரை மன்னிக்கும் போது அல்லாஹ் அவனை மன்னித்து விடுவான்.

**8) வீட்டில் ஷரீஅத்தைப் நடைமுறைப் படுத்த வேண்டும்.**

எட்டாவது முக்கியமான விஷயம், நீங்களும் ஷரீஅத்தைப் பேண வேண்டும். மனைவியிடத்திலும் அன்பான முறையில் ஷரீஅத்தை நடைமுறைப் படுத்தவேண்டும். முதலில் நீங்களே முன்மாதிரியாக பேணுதலுடன் இருக்கும் பொழுது தான் உங்கள் மனைவியும் உங்களைப் பின்பற்றி ஷரீஅத் சுன்னத்தைப் பேணுவாள்.

பொதுவாக நடப்பதென்ன? கணவன் அரைகுறையாக இருப்பான். ஆனால் மனைவி ராபிஅத்துல் பஸரிய்யாவாக இருக்க வேண்டும் என்று நினைப்பான். ஒருக்காலும் அவள் ராபிஅத்துல் பஸரிய்யாவாக ஆகவே மாட்டாள். மாறாக உன்னைப் போலவே நானும் வாழ்வேன் என்று கூறுவாள். இதனால் பிரச்சனை வெடிக்கும். நாம் நம் வீட்டில் ஷரீஅத் சுன்னத்தின் சூழ்நிலையை உருவாக்க முற்பட்டால் முதலில் நம்மிலிருந்து தான் நடைமுறைப்படுத்த வேண்டும். முதலில் நம் வாழ்வில் ஷரீஅத்தைக் கொண்டு வரவேண்டும். நபி ﷺ அவர்களின் வெளிரங்க, உள்ரங்க அனைத்து சுன்னத்துகளையும் தமதாக்கிக் கொள்ளுங்கள். பிறகு வீட்டாருக்கு எடுத்துச் சொல்லுங்கள். நிச்சயமாக வீட்டார் இச்செயலை ஏற்றுக் கொள்வார்கள். நாம் பெரும்பாலும் பார்க்கின்றோம் மனைவிமார்கள் தங்கள் கணவன் நல்லவனாக இருக்க வேண்டுமென்று துஆ செய்து கொண்டே இருக்கிறார்கள். அன்றாட அமல்களையும் செய்து துஆ செய்கின்றனர். தங்கள் வீடுகளில் நல்ல சூழல் உருவாக வேண்டுமென விரும்புகிறார்கள். ஆனால் கணவன்மார்களின் குணங்களோ ஆச்சரியமாக இருக்கிறது. கெட்ட நண்பர்களுடன் பழகி வாலிபத்தை வீணடித்துக் கொண்டிருக்கிறான். இதனால் வீடு கெட்டு குட்டிச் சுவராகிவிடுகிறது.

**நபி ﷺ அவர்களுக்கு எந்த முகத்தைக் காட்டுவீர்கள்.**

மறந்து விடாதீர்கள்! அல்லாஹ் நமக்கு குடும்பம், வீடு என்ற அருட்கொடையை வழங்கி இருக்கின்றான். எனவே வீட்டில் ஷரீஅத்தை நடைமுறைப் படுத்துவது கணவனின் கடமை. அல்லாஹ்வின் பிரிய நபி ﷺ அவர்களின் சுன்னத்துகளை உயிர்ப்பிப்பது கணவனின் பொறுப்பு. இந்த கடமையை நிறைவேற்றவில்லை என்றால் கியாமத் நாளன்று நமது பாசமான

நபி ﷺ அவர்களுக்கு எந்த முகத்தைக் காட்டுவீர்கள். இன்று நமது வீடுகள் நபி ﷺ அவர்களின் சுன்னத்துகளின் பலியிடங்களாக மாறிவிட்டன.

சில சமயம் மனைவி சுன்னத்தை உடைக்கிறாள். சில சமயம் மகள் சுன்னத்திற்கு மாறு செய்கிறாள். மகன் சுன்னத்தை பலிகடாவாக்குகிறான். ஆனால் தந்தையோ அமைதியாக பார்த்து கொண்டிருக்கிறார். இன்று தீனைப் பற்றிக் கவலைக் கொள்பவர் யார்? தன் வீட்டை நபி ﷺ அவர்களின் சுன்னத்துகளின் தோட்டமாக மாற்றுபவர் யார்? இது சாத்தியமாகுவதற்கு என்ன வழி? அதற்கு முதலில் கணவன் சுன்னத்துகளின் படி செயல்பட வேண்டும். தலை முதல் கால் விரல் நகம் வரை சுன்னத்தின் படி அமைக்க வேண்டும். தேடித் தேடி சுன்னத்துகளை பின்பற்ற வேண்டும். பிறகு தன் வீட்டாரை சுன்னத்தின் படி செயல்பட ஆர்வமூட்ட வேண்டும். கொஞ்சம் கொஞ்சமாக மனைவி மக்களுக்கு புரிய வைத்தால் அல்லாஹ் அவர்களின் உள்ளங்களிலும் தீனின் மகத்துவத்தைப் போடுவான். பிறகு அவர்களும் ஷரீஅத்தைப் பின்பற்றுவார்கள்.

**பர்தாவின் குறைபாடு**

இன்று வீடுகளில் பர்தா பற்றிய சிந்தனை கணவனிடமே இருப்பதில்லை. இவர் எப்படி மனைவியை பர்தா பேணுதலுடன் வாழ வைப்பார். மாறாக பருவ வயதை அடைந்த அந்நிய ஆண்களை வீடுகளில் வேலைக்கு அமர்த்துகிறார்கள். இவர்கள் (அக்கால) அடிமைகளைப் போன்றவர்கள் என்று நினைக்கின்றனர். இது நூற்றுக்கு நூறு ஹராமான செயலாகும். அந்நிய ஆணுக்கு முன்னால் பர்தா இல்லாமல் உலவும் பாவத்திற்கு மனைவி தினமும் ஆளாகிறாள். இதனால் கணவனின் செயலேட்டில் தினசரி பாவக்கணக்கு எழுதப்படுகிறது. எனவே வீட்டில் அந்நிய ஆண்களை வேலைக்கு வைக்கும் கணவன் தனக்காக பாவங்களின் சேமிப்புக் கணக்கை திறந்து விடுகிறான். இவன் தூங்கும் பொழுதும் பாவம் எழுதப்படுகிறது. விழித்திருக்கும் பொழுதும் பாவம் எழுதப்படுகிறது. இவன் பள்ளியில் தொழுது கொண்டிருக்கிறான். அங்கே மனைவிக்கு முன்னால் அந்நிய ஆண் வேலை செய்கிறான். இதனால் கணவனுக்கும் பாவம் எழுதப்படுகிறது. இவரது நற்காரியங்களால் என்ன பலன் கிடைக்கப் போகிறது. எனவே ஆலிம்களிடம் சட்டங்களை கேட்டு செயல்பட வேண்டும்.

மேலை நாடுகளில் பர்தாவின் நிலை மிகவும் மோசமாக இருக்கிறது. ஹராமை ஹராம் என்றே அவர்கள் விளங்காமல் இருப்பதைப் பார்த்து சில சமயங்களில் திகைப்பு ஏற்படுகிறது. இதனால் ஆன்மிகத்தில் முன்னேற முடிவதில்லை. ஆண்களும் பெண்களும் நமக்கு கடிதம் எழுதுகிறார்கள். ஹள்ரத் இந்த திக்ரு செய்கிறோம்; அந்த வஜீஃபாவும் ஓதுகிறோம். ஆனால் எந்த பிரதிபலிப்பும் ஏற்படுவதில்லையே என்று புலம்புகிறார்கள்.

சகோதரா! பர்தாவைப் பேணவில்லை என்றால் நல்ல பிரதிபலிப்பு எப்படி ஏற்படும்? இது அல்லாஹ்வின் கட்டளையை உடைப்பதல்லவா? இதனால் வீடுகளில் பரக்கத்தின்மை ஏற்படுகிறது. கணவன் மனைவிக்கிடையே பிரச்சனைகள் நிலவுகின்றன. ஹராமையும் ஹலாலையும் ஒன்றாகவே பார்க்கிறோம். இதனால் தான் முஸீபத்கள் வருகின்றன.

**ஆன்மிக நிலை ஏன் பறிக்கப்பட்டது?**

நமது ஸில்ஸிலாவில் ஒரு மகான் இருந்தார்கள். அவர்கள் தன் வாழ்வில் நடந்த நிகழ்வை இவ்வாறு விவரிக்கிறார்கள். எங்கள் பக்கத்து வீட்டில் நண்பர் ஒருவர் இருந்தார். அவருக்கு ஒரு பெண் குழந்தை இருந்தது. அக்குழந்தை எங்கள் வீட்டிலேயே பிரியத்துடன் வளர்ந்து வந்தது. அச்சிறுமி பகல் முழுவதும் எங்கள் வீட்டிலேயே இருப்பாள். இரவு மட்டுமே தன் வீட்டிற்கு பெற்றோரிடம் செல்வாள்.

இந்நிலையில் ஒரு முறை எனது ஆன்மிக நிலை பறிக்கப்பட்டதை உணர்ந்தேன். தஹஜ்ஜுதில் அதிகமாக அழுதேன். யா அல்லாஹ்! என் பழைய நிலையை திருப்பிக் கொடு என்று மன்றாடினேன். ஒரு முறை என் ஷைகிடம் சென்று, ஹள்ரத் அதிகமாக முயற்சி செய்கிறேன். அன்றாட அமல்களைப் பேணுதலுடன் நிறைவேற்றி வருகிறேன். பல மணி நேரம் முராகபா செய்கிறேன். ஆனாலும் என் ஆன்மிக நிலை பறிக்கப்பட்டு விட்டதே! என்ன காரணம்? என்று தெரியவில்லையே என்று முறையிட்டேன். அதற்கு ஷைகு அவர்கள் உன்னிடத்தில் எங்கோ பெரும் பாவம் நிகழ்கிறது. அதன் காரணமாகவே இந்த நிஃமத் பறிக்கப்பட்டுவிட்டது யோசித்துப் பாருங்கள் என்றார்கள்.

**பெரும்பாவமா? அப்படி ஏதும் நிகழவில்லையே...**

நான் யோசித்தேன். என் வாழ்வில் எனக்குத் தெரிய எந்த பெரும்பாவமும் செய்யவில்லையே! பிறகு ஏன் இந்த நிலை ஏற்பட்டது என்று நினைத்து நினைத்து சடைந்து விட்டேன். கடைசியாக எனது இத்தனை கால உழைப்பும் வீணாகிக் கொண்டிருக்கிறது. என் மூலம் ஏதோ பெரும்பாவம் நிகழ்வதாக என் ஷைகு கூறுகிறார்கள் என்று என் மனைவியிடம் ஆலோசனை கேட்டேன். அப்பொழுது என் மனைவி ஆமாம், ஒரு பாவம் நடக்கிறது என்றாள். நான் அதிர்ந்து போய் என்ன பாவம் அது? என்றேன்.

நம் பக்கத்து வீட்டுக்காரரின் மகளை நாம் சிறுவயதிலிருந்தே மகளாக வளர்த்து வருகிறோம். அவளை நீங்கள் மகளைப் போன்று பிரியமாக வளர்த்தாலும் அவளை நீங்கள் தவறாக பார்க்காவிட்டாலும் அவள் உங்களுக்கு மஹ்ரமானவள் அல்லவே! அந்நியப் பெண் தானே! சில நாட்களுக்கு முன் அவள் பருவவயதை எத்தி விட்டாள்.

எனவே அவள் மீது தொழுகை கடமையாகிவிட்டது. இப்பொழுதும் அவள் மீது உங்கள் பார்வை படுகிறதே! அதன் காரணமாகவே இந்த பரக்கத்தின்மை உருவாகி இருக்கிறது. உங்கள் ஆன்மிக நிலை பறிக்கப்பட்டுவிட்டது என்றாள்.

அம்மகான் கூறுகிறார்கள் அன்று முதல் அச்சிறுமியை பர்தாவில் இருக்கச் சொன்னேன். அவளும் பர்தாவை அனுஷ்டிக்க ஆரம்பித்து விட்டாள். பிறகு அல்லாஹ் எனது பழைய ஆன்மிக நிலையைத் திருப்பித் தந்தான்.

பர்தா இவ்வளவு முக்கியமான விஷயம்! கவனக் குறைவால் பார்வை பட்டு விட்டாலும் அப்பார்வை கெட்ட எண்ணத்துடன் இருந்தாலும் சரி இல்லாவிட்டாலும் சரி இவ்வளவு பெரிய தாக்கத்தை ஏற்படுத்துகிறது என்றால் வீடுகளில் வாலிபர்கள் வேலை செய்து கொண்டிருக்க அவ்வீட்டுப் பெண்கள் அவர்களை அந்நிய ஆண்கள் என்று கூட கருதாமல் உலாவிக் கொண்டிருக்கிறார்கள். அல்லது இளம் பெண்கள் வேலை செய்கிறார்கள். ஆண்கள் அவர்களை அந்நியப் பெண்கள் என்று கூட கருதாமல் இருக்கிறார்கள் என்றால் அங்கே உள்ளத்தில் ஆன்மிக நிலைபாடு எப்படியிருக்கும்.

ஆக இது ஒரு முக்கியமான பிரச்சனை. எனவே தங்கள் பகுதியிலுள்ள ஆலிம்களிடம் சட்டங்களைக் கேட்டு செயல்படுங்கள். ஏனெனில் எனது வேலை விஷயத்தை எத்தி வைப்பது தான்!

**ஷரீஅத்தை நடைமுறைப் படுத்துவது கணவனின் கடமை**

வீடுகளில் ஷரீஅத்தை நடைமுறைப்படுத்த வேண்டும். அப்பொழுது ஆண், பெண் கலக்கும் நிகழ்ச்சிகளை தவிர்க்க வேண்டும். விருந்துகள் நடைபெற்றால் ஆண்கள் தனியாக அமர்ந்து சாப்பிட வேண்டும். மஹ்ரமில்லாத (பார்க்க அனுமதிக்கப்படாத) ஆண்கள் இருந்தால் அவர்களுடன் அமராமல் பெண்கள் தனியாகவே அமர்ந்து சாப்பிட வேண்டும்.

ஆக ஷரீஅத்தை நடைமுறைப்படுத்துவது கணவனின் பொறுப்பு. கணவன் மார்க்க முறைப் பேணி வாழ்க்கை நடத்தினால் வீட்டில் நிம்மதி நிலைத்திருக்கும். ஆனால் நடப்பதென்ன? வீடுகளில் ஷரீஅத் வாழ்க்கை முறை இருப்பதில்லை. பர்தா பேணப்படுவதில்லை. இதனால் பிரச்சனைகள் தலை விரித்து ஆடுகின்றன. தவறான எண்ணங்கள் பிறக்கின்றன. பிறகு ஷைத்தான் எப்படியாவது ஏதாவது ஒரு தவறில் வீழ்த்தி விடுகிறான். இதனால் பிரச்சனைகள் உருவாகி வீட்டின் நிம்மதி பறிபோய் விடுகிறது. எனவே, இனியாவது ஷரீஅத் படி வாழ்வோம் என்று தங்களுக்கிடையே முடிவு செய்யும் போது தான் வாழ்க்கை ஆரோக்கியமாகும். ஷரீஅத்தை நடைமுறைப் படுத்துவதில் மட்டுமே நமக்கு முழு நிம்மதி கிடைக்கும். உள்ளத்தில் அன்பு, பாசம் பெருகும். வேறு எங்கும் நிம்மதி கிடைக்கவே கிடைக்காது.

கணவன் மனைவி இருவரும் நாங்கள் ஷரீஅத் படி தான் வாழ்வோம் என்று முடிவு செய்ய வேண்டும். அப்பொழுது அல்லாஹ் அவர்களின் குழந்தைகளை நல்லவர்களாக பெற்றோருக்கு கட்டுப்படுபவர்களாக ஆக்குவான். பெற்றோர்களே அல்லாஹ்விற்கு மாறு செய்யும் போது குழந்தைகள் மட்டும் அல்லாஹ்விற்கு எப்படி கட்டுப்படுவார்கள்?

**அல்லாஹ்விற்கு நாம் மாறு செய்தால்.........**

ஹள்ரத் ஃபுழைல் (ரஹ்) அவர்கள் தாபியீன்களில் மிக முக்கியமானவர்கள். அவர்கள் கூறுவார்கள்: அல்லாஹ்வின் கட்டளைப்படி நடப்பதில் நான் குறைவு செய்யும் பொழுது அதன் பிரதிபலிப்பை என் மனைவி,

அடிமைகள் மற்றும் என் வாகனமானகால்நடைகளில் கண்டு கொள்வேன். அதாவது அல்லாஹ்வின் கட்டளைகளை செயல்படுத்துவதில் நான் சோம்பல் செய்யும் போது எனக்குக் கீழ் இருப்பவர்கள் எனது கடமைகளை நிறைவேற்றுவதில் குறைவு செய்வார்கள்.

ஆக நாம் அல்லாஹ்வின் கட்டளைகளை மீறும் போது அதன் விளைவாக நமது பிள்ளைகள் நமது கட்டளைகளுக்கு மாறு செய்பவர்களாக மாறிவிடுவார்கள். ஆகவே மிகச் சிறந்த வீடு எதுவென்றால் எங்கே ஷரீஅத் சுன்னத் படி வாழ்க்கை நடத்தப்படுமோ அது தான்.

**9) இருவரும் ஒரே நேரத்தில் கோபப்படக் கூடாது**

ஒன்பதாவது முக்கிய விஷயம் கணவன் கோபப்பட்டால் மனைவி கோபப்படக் கூடாது. அல்லது சில சமயம் பேசிக் கொண்டிருக்கும் போது மனைவி கோபம் கொண்டால் கணவன் கோபத்தை அடக்கிக் கொள்ள வேண்டும். ஆக ஒரே நேரத்தில் இருவரும் கோபம் கொள்ள மாட்டோம் என்று இருவரும் முடிவு செய்து கொள்ள வேண்டும்.

முதல் விஷயம், கோபப்படவே கூடாது. அப்படியே மனிதன் என்ற அடிப்படையில் ஏதாவது காரணத்தினால் அல்லது ஏதாவது ஒரு பேச்சின் போது ஒருவர் கோபப்பட்டு விட்டார். அவரது சப்தம் உயர்ந்து முகத்தில் கோபத்தின் அறிகுறிகள் தென்படுகின்றன என்றால் மற்றவர் அமைதி காக்க வேண்டும். மனைவி கோபப்படும் போது கணவன் புத்திசாலித்தனமாக செயல் பட வேண்டுமே தவிர அவரும் பதிலுக்கு கோபப்படக்கூடாது. அல்லது கணவன் கோபப்படுகிறான். இந்த கோபம் முறையற்றது என்று மனைவிக்கு நன்கு தெரிகிறது என்றாலும் அச்சமயம் அவள் அமைதியாகி விடவேண்டும். பிறகு சிறிது நேரம் கழித்து நியாயத்தை எடுத்துச் சொன்னால் அவர் முன்பு எவ்வளவு கோபப்பட்டாரோ அதே அளவு அன்பைப் பொழிவதை அவள் பார்க்க முடியும். ஏனெனில் மனிதர்கள் என்றால் சுபாவங்கள் பலதரப்பட்டவையாகத் தான் இருக்கும். சில சமயம் மனிதனுக்கு தவறான எண்ணங்கள் ஏற்பட்டு விடுகின்றன. சில சமயம் வேறு காரணத்தினால் மனம் வெறுப்படைந்து விடுகிறது. எனவே இது போன்ற சந்தர்ப்பங்களில் மற்றொரு நபரும் கோபப்பட்டு விடக் கூடாது என்ற விஷயத்தை வாழ்வின் வழிமுறையாக்கிக் கொள்ள வேண்டும்.

ஒரு நூலை இருவர் பிடித்திருக்கிறார்கள் என்றால் இருவரும் சேர்ந்து இழுத்தால் நூல் அறுந்து போய்விடும்.ஆனால் ஒருவர் இழுக்கும் போது மற்றவர் பிடி தளர்த்தி விட்டால் நூல் அறுந்து போகாமல் பாதுகாக்கப்படும். இதே போல் தான் கணவன் கோபப்படும் போது மனைவி நூலை விட்டு விட வேண்டும். சிறிது நேரத்தில் கணவன் சமநிலைக்கு வந்துவிடுவான். சொந்தம் அறுந்து போகாமல் பாதுகாக்கப்படும். மனைவி கோபப்படும் போது கணவன் கொஞ்சம் அமைதி காத்து கோபத்தை அடக்கிக் கொண்டால் சிறிது நேரத்திலேயே அவளது கோபம் குளிர்ந்து போவதைக் காண்பான்.

**மனைவி கோபப்பட்டால்..............**

மனைவி கோபப்படும் போது கணவன் அவளிடம் அன்பாக பேச வேண்டும். நபி ﷺ அவர்களின் புனித சுன்னத்தைப் பாருங்கள். ஒரு முறை ஏதோ ஒரு விஷயத்தில் ஹள்ரத் ஆயிஷா (ரலி) அவர்களுக்குக் கோபம் வந்து விட்டது. நபி ﷺ அவர்கள், ஹள்ரத் ஆயிஷா (ரலி) அவர்களின் காது சோனைகளை தம் புனித கை விரல்களால் பற்றிப் பிடித்து லேசாக அழுத்தம் கொடுத்து அன்பான வார்த்தைகளால் கூறினார்கள். என் குட்டி ஆயிஷாவே! (ஏனெனில் நபி ﷺ அவர்களை விட வயதில் மிகக் குறைந்தவர்கள். ஆனாலும் இப்பொழுது கோபத்தில் இருக்கிறார்கள். எனவே தன் விரல்களால் அவர்களின் காது சோனையைப் பிடித்து அமுக்கியவர்களாக பிரியத்துடன் என் குட்டி ஆயிஷாவே! என்று கூறினார்கள்) என் செல்ல ஆயிஷாவே! நீ உன் ரப்பிடம் பாவ மன்னிப்பு தேடு. மேலும் யா அல்லாஹ்! என் கோபத்தை போக்கிவிடு என்று துஆ செய் என்றார்கள். அவ்வளவு தான்! நபி ﷺ அவர்களின் இந்த வார்த்தைகளை கேட்ட மறுவினாடியே ஹள்ரத் ஆயிஷா (ரலி) அவர்களின் கோபம் மறைந்து விட்டது.

**கணவன் மனைவியின் கோபம் ஷைத்தானுக்கு சந்தோஷம்**

கணவன் கோபப்பட்டால் மனைவியும், மனைவி கோபப்படும் போது கணவனும் சகிப்புத் தன்மையைக் கையாள வேண்டும். இருவரும் ஒரே நேரத்தில் கோபப்படும் போது ஷைத்தான் சந்தோஷமாகி விடுகிறான். ஏனெனில் ஷைத்தானின் வேலை அரங்கேறுவதே கணவன், மனைவி இருவரும் கோபப்படும் போது தான். மனைவி கசப்பான வார்த்தைகளால்

வசைபாடுகிறாள். கணவன் ஒருபடி முன்னேறி மிரட்டல்களை அவிழ்த்து விடுகிறான். கோபத்தில் வீடே ஆட்டம் காணுகிறது. இறுதியில் தலாக்கில் வந்து முடிகிறது.

ஒரு வாலிபர், இந்த அடியானிடம் வந்து ஹள்ரத்! ஒரு தவறு நடந்துவிட்டது. நான் கோபத்தில் மனைவியை தலாக் சொல்லிவிட்டேன் என்றார். உலகத்தில் யாராவது சந்தோஷமாக இருக்கும் பொழுது தலாக் கூறுவார்களா? தலாக் என்பதே கோபத்தின் நேரத்தில்தான் அவசரப்பட்டு கூறிவிடுகிறார்கள் என்றேன். பிறகுதான் அவருக்கு நாம் எவ்வளவு பெரிய தவறு செய்து விட்டோம் என்பது புரிந்தது.

ஞாபகம் வையுங்கள்! எப்பொழுதும் ஒருவர் மற்றவருடன் கத்திப் பேசவும் கூடாது. மென்மையான அன்பான தொனியில் பேசும் பழக்கத்தை உண்டாக்கிக் கொள்ளுங்கள். ஒரே ஒரு சந்தர்ப்பத்தில் தான் கத்த வேண்டும். வீட்டில் நெருப்புப் பற்றிக் கொண்டால் மற்றவருக்கு தெரியப்படுத்த சத்தமாக கத்த வேண்டும். அதுவல்லாத மற்ற எந்த சந்தர்ப்பத்திலும் கத்த வேண்டிய அவசியமே இல்லை. எனவே மென்மையாக அன்பாகப் பேசிப் பழகுங்கள். பெரிய பெரிய பிரச்சனைகளுக்கும் ஷரீஅத் அழகான தீர்வுகளை சொல்லியிருக்கிறது. அதாவது அன்பால் பிரச்சனைகளை வெல்ல வேண்டும்.

கணவன் கோபத்தில் இருக்கும் போது சிறிது நேரம் பொறுமை கொள்ளலாம் என்று எண்ணுமளவு அல்லாஹ் மனைவிக்கு அறிவை கொடுத்திருக்கிறான். அதே போல் கணவனுக்கும் அல்லாஹ் புத்தியை தந்துள்ளான். மனைவியின் கோப நிலையில் சிறிது நேரம் பொறுமை கொள்ள வேண்டும். இப்படி செய்தால் ஷைத்தான் இடையில் மூக்கை நுழைப்பதை விட்டும் அல்லாஹ் தடுத்திடுவான். பிறகு முழு வாழ்க்கையும் அன்பு பிரியத்துடன் இயங்கிவரும்.

**10) இருவருக்குமிடையே மனஸ்தாபம் இருக்கும் நிலையில் தூங்காதீர்கள்.**

பத்தாவது முக்கிய விஷயம் என்னவெனில் எப்பொழுதாவது ஏதாவது காரணத்தால் இருவருக்குமிடையில் வாய்ப்பேச்சு முற்றிவிட்டால் அல்லது ஏதாவது ஒரு விஷயம் நடந்து விட்டால் கணவன், மனைவி இருவரும் இந்த மன வருத்தம் இருக்கும் நிலையில் தூங்கவே கூடாது.

இது எப்படி நடக்கிறது? முதலில் இருவருக்குமிடையே பேச்சு வார்த்தை நடந்தது. பிறகு அது முற்றிப்போய் கோபமாக மாறிவிடுகிறது. கணவன் இந்த பக்கம் திரும்பி படுத்துக் கொண்டார். மனைவி அந்தப் பக்கம் முகத்தைத் திருப்பிக் கொண்டாள். பிறகு தாம் தூங்கிவிட்டதாக இருவரும் நினைத்துக் கொள்கின்றனர். முடியவே முடியாது. இது வீட்டை குட்டிச்சுவராக்குவதற்கான அஸ்திவாரம்.

முதலில் பிரியத்திற்குண்டான நேரத்தில் மனக்கசப்புகள் வரவே கூடாது. அப்படி ஏதாவது ஒரு கருத்து வேறுபாடு ஏற்பட்டுவிட்டது. மனைவி மறுத்துக் கூறினாள். கணவன் ஏற்றுக் கொள்ளவில்லை. இதனால் இருவருக்குமிடையே வாக்கு வாதம் ஆரம்பமாகிவிட்டது என்றால் எதுவரை ஒருவர் மற்றவரை சமாதானப்படுத்த மாட்டார்களோ, ஒருவர் மற்றவரை புரிந்துகொள்ள மாட்டார்களோ அதுவரை அதே கோபத்தோடு உறங்குவது ஹராமைப் போன்று கருத வேண்டும்.

ஏனெனில் கணவன் கோபமாக இருக்கும் நிலையில் மனைவி தூங்கினால் அவள் மீது அல்லாஹ்வின் மலக்குகள் சாபமிடுகின்றனர் என்று ஹதீஸில் வந்துள்ளது. எனவே கணவனை சமாதானப்படுத்தாமல் தூங்க முற்படும் மனைவிமார்கள் "எனது கணவன் என்மீது கோபமாக இருக்கும் போது நான் எப்படி தூங்குவேன். அல்லாஹ்வின் கோபமும் வந்துவிடுமே" என்று சிந்திக்க வேண்டும்.

அதே போல கணவனும், என் மனைவி எனக்கு பணிவிடை செய்பவளாயிற்றே! அவளை நான் கஷ்டப்படுத்தி விட்டேனே! அவளது மனம் காயப்பட்டுவிட்டது. எனவே தான் அவள் கோபப்பட்டுவிட்டாள். நான் அவளது காயப்பட்ட மனதை சந்தோஷப்படுத்தவில்லை என்றால், மனைவியை மகிழ்ச்சியாக வைக்க வேண்டும் என்று ஷரீஅத் கட்டளையிட்டிருக்கும் போது அவளை நீ ஏன் சந்தோஷப் படுத்தவில்லை என்று அல்லாஹ் என் மீது கோபப்பட்டுவிடக் கூடாதே என்று எண்ணிப்பார்க்க வேண்டும். பிறகு மனைவி கணவனையும், கணவன் மனைவியையும், சமாதானப்படுத்த வேண்டும். கோபமாக இருக்கும் நிலையில் எப்பொழுதும் தூங்கவே கூடாது. மாறாக இது போன்ற நேரத்தில் இந்த உர்து கவிதையின் கருத்தை நினைவு கூர வேண்டும்.

فرصت زندگی کم ہے محبتوں کے لئے
لاتے ہیں کہاں سے وقت لوگ نفرتوں کے لئے

**வாழ்க்கையில் மகிழ்ச்சியாக இருக்கவே அவகாசம் குறைவாக இருக்கும் போது மக்களுக்கு வெறுப்பை வெளிப்படுத்த நேரம் எங்கிருந்துதான் கிடைக்கிறதோ!**

ஏனெனில் வெறுப்பிற்கு நேரமே இல்லை. கிடைத்த நேரத்தை மகிழ்ச்சியாக கழித்து விடுங்கள்.

**கணவன் மனைவி இருவருமே ஜெயிப்பவர்கள் தான்**

ஏதாவது வாக்குவாதம் ஏற்பட்டு விட்டால் ஒருவர் மற்றவரை வெறுப்பேற்றிய நிலையில் தூங்கக் கூடாது என்ற வழிமுறையை பின்பற்றுங்கள். எப்படியாவது சமாதானப்படுத்தி விட வேண்டும். இருவரில் யார் மன்னிப்பு கேட்க வேண்டி இருந்தாலும் சரி! சந்தர்ப்ப சூழ்நிலையைக் கவனித்து ஒருவர் மற்றவரிடம் மன்னிப்புக் கேட்டுக் கொள்ள வேண்டும். ஆனால் கோபமான நிலையில் எப்பொழுதும் தூங்கக் கூடாது என்ற உறுதி இருக்க வேண்டும். ஏனெனில் கோபமான நிலையில் தூங்கும் போது உள்ளத்தில் வெறுப்பின் விதைகளைத் தூவ ஷைத்தானுக்கு சந்தர்ப்பம் கிடைத்து விடுகிறது. பிறகு விதைக்கு தண்ணீர் பாய்ச்சுவான். அப்படியே வெறுப்பு உள்ளங்களில் வேர் பிடித்து கிளைவிட்டு வளர ஆரம்பித்து விடும். எனவே எப்பொழுதாவது வெறுப்பு ஏற்படுகிறது என்றால் "இத்துனை நல்ல சந்தர்ப்பத்தில் பிரச்சனை பண்ணுவது நல்லதில்லை. வெற்றி தோல்வியின் பிரச்சனையை நாளைக் கென்று தள்ளிப்போட்டு விடுவோம். இன்று அன்பு பாராட்டுவோம்" என்ற உர்து கவிதையின் கருத்தை ஒருவர் மற்றவருக்கு சொல்லிக் கொண்டால் இருவருக்கும் மத்தியில் வெறுப்பு காணாமல் போய்விடும்.

உண்மையில் கணவன் மனைவிக்கு மத்தியில் தோல்வி என்பதே கிடையாது. நம்புங்கள்! இருவருக்குமிடையே வெற்றியே வெற்றிதான். கணவனை நெருக்கமாக்கிக் கொண்டால் அது மனைவியின் வெற்றி. மனைவியை தன்னவளாக்கிக் கொண்டால் அது கணவனுக்கு வெற்றி. எனவே இருவருக்குமிடையே தோல்வியே கிடையாது.

**இங்கே வெற்றி மட்டும் தான். தோல்வியே கிடையாது. இங்கே யார் இறங்கி மன்னிப்பு கேட்பாரோ அவர் தான் வெற்றிவாகை சூடிக் கொண்டவர். எதை வெற்றி கொண்டார்? அடுத்தவரின் உள்ளத்தை வெற்றிக் கொண்டு விட்டார். ஆக மன்னிப்பு கேட்பது தோல்வியல்ல. அது தான் வெற்றி. இப்பொழுது மனைவியும் ஜெயிக்கலாம். கணவனும் ஜெயிக்கலாம். அல்லாஹ் இருவரையும் ஜெயிக்க வைப்பானாக!**

எனவே நாம் குடும்ப வாழ்க்கையில் இந்த பொன்னான வழிமுறைகளை பின்பற்றிட வேண்டும். ஒரு வேளை இருவருக்குமிடையே ஒரு சுமூக முடிவு ஏற்படவில்லை என்றால் பிரச்சனையை நாளைப் பார்ப்போம் என்று தள்ளிப் போட்டு விட்டு இன்றைய தினம் ஒருவர் மற்றவரை சந்தோஷப்படுத்த வேண்டும்.

**Let us agree upon this agree in tonight** வாருங்கள்! நாம் இன்று இந்த விஷயத்தில் ஒத்துப் போக முடியாது என்ற முடிவில் ஒத்துப் போய்விடுவோம் என்றாவது சொல்லி முற்றுப் புள்ளி வையுங்கள்.

இதுவும் ஒத்துப்போவது தான். இத்துடனே பிரச்சனைக்கு முற்றுப் புள்ளி வைத்து விட வேண்டும். ஆக நோக்கம் என்னவென்றால் எந்த பேச்சு வார்த்தை நடை பெற்றாலும் அதன் இறுதி முடிவு இருவரின் அன்பாகத்தான் இருக்க வேண்டும். அப்பிரச்சனையை முடிவுக்கு கொண்டு வராமல் கோபமான நிலையில் தூங்கக் கூடாது.

சங்கைமிக்க இறைவன் இந்த பொன்னான வழிமுறைகளை பின்பற்றி வாழ நம்மனைவருக்கும் நல்லுதவி புரிவானாக! மேலும் அல்லாஹ் நமக்கு நல்ல இல்வாழ்க்கை வாழ அருள்புரிவானாக! ஆமீன்.

*நன்றி* – **மனாருல் ஹுதா**

பல்சுவை மாத இதழ்.

## அந்நியப் பெண்களைப் பார்ப்பதினால் ஏற்படும் விபரீதங்களும் அதை விட்டு தவிர்ந்து கொள்ளும் வழிமுறைகளும்.

( நபியே! ) முஃமினான ஆண்களுக்கு நீர் கூறுவீராக! அவர்கள் தங்கள் பார்வைகளை தாழ்த்திக் கொள்ளவும். தங்களின் மறைவிடங்களையும் பாதுகாத்துக் கொள்ளவும். (24:30)

( நபியே! ) முஃமினான பெண்களுக்கு நீர் கூறுவீராக! அவர்கள் தங்கள் பார்வைகளை தாழ்த்திக் கொள்ளவும். தங்களின் மறைவிடங்களையும் பாதுகாத்துக் கொள்ளவும். (24:31)

மனிதன் மானக்கேடான காரியங்களில் மூழ்கிவிட மூலக் காரணம், அவன் தன்னுடைய பார்வையை கடிவாளமிட்டு கட்டுப்படுத்தாததேயாகும். எனவேதான் கெட்ட பார்வையை உம்முல்கபாயிஸ் - மானக்கேடான பாவங்களின் தாய் என்று மார்க்க விற்பன்னர்கள் கருதுகிறார்கள்.

கண்கள், ஃபித்னா - அசம்பாவிதங்கள் பொங்கிவரும் ஊற்றாகஇருக்கின்றன. இந்நிலையில் பெண்கள் நிர்வாணமாக சுற்றித் திரிவது இந்த ஃபித்னாவை மென்மேலும் அதிகப்படுத்திவிடுகிறது.

ஹள்ரத் ஷைகுல் ஹதீஸ் ஜகரிய்யா (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள் : கெட்ட பார்வை மிக மோசமான வியாதியாகும். ஆரம்பத்தில் சிலருக்கு திக்ரு செய்வதில் அதிக ஆர்வம் இருக்கும். ஆனால் இந்த கெட்ட பார்வை அந்த ஆர்வத்தையும் வணக்க வழிபாடுகளில் ஏற்படும் இன்பத்தையும் அழித்துவிடுகிறது. பிறகு சிறிது சிறிதாக அவர் நல்ல அமல்கள் செய்வதை முழுமையாக விட்டுவிடுகிறார்.(ஆப்பீ(த்)தி பாகம்:2,பக்கம்:418)

ஷைகு வாஸிதி (ரஹ்) அவர்கள் அடிக்கடி கூறுவார்கள்; அல்லாஹ் ஒரு மனிதனை கேவலப்படுத்த நாடிவிட்டால் அழகிய முகங்களை பார்க்கும் பழக்கத்தை அவனுக்கு ஏற்படுத்திவிடுவான்.

சீவி சிங்காரித்து கவர்ச்சியாக வலம்வரும் பெண்களும் அவர்களை இச்சையுடன் பார்க்கும் ஆண்களும் அல்லாஹ்வின் சாபத்திற்குரியவர்களாகும். நெருப்புக் குண்டம் சிறிய

தீப்பொறியினால் உருவாகுவதைப் போல் விபரீத குற்றங்கள் கெட்ட பார்வையின் மூலம் உருவாகின்றன. எனவே வெட்கத் தலங்களை பாதுகாக்க பார்வையை தாழ்த்துவது மிக அவசியமாகும்.

நாம் நம்முடைய கண்களுக்கு திரையிடாவிட்டால் நம் உள்ளங்களின் மீது திரை போடப்படும். எச்சரிக்கையாக இருந்து கொள்ளுங்கள்!

தீய பார்வையை விட்டு விலகியிருக்க சில வழி முறைகளை முரீதீன்களுக்கு ஷைகுமார்கள் குறிப்பிடுகிறார்கள் :

1. பாதையில் செல்லும் போது பார்வையை மிகவும் தாழ்த்திக்கொள்ள வேண்டும். அருகில் செல்பவர்கள் ஆணா பெண்ணா என்பதைக் கூட பாதங்களை வைத்து அனுமானித்துக் கொள்ள வேண்டும்.
2. சூப்பர் மார்கெட் மற்றும் டிக்கெட் கவுண்டர் போன்றவற்றில் ஆண்கள் இருக்குமிடத்தை தேர்ந்தெடுக்க வேண்டும். இதனால் பெண்களிடம் பேசும் சந்தர்ப்பம் தவிர்க்கப்படுகிறிது.
3. அந்நியப் பெண்களிடம் பேச வேண்டிய நிர்பந்தம் எற்பட்டால் சண்டையிட்டுக் கொண்ட இரு நபர்கள் பேசுவதைப் போல் முகத்தை பார்க்காமல் பேசுங்கள்.
4. சாலை ஓரங்களில் ஒட்டப்பட்டுள்ள சினிமா போஸ்டர்களை பார்க்காதீர்கள்!
5. வாகனத்தில் செல்லும் போது அருகில் செல்லும் வாகனத்தில் அமர்ந்துள்ள பெண்களின் பக்கம் கவனத்தை செலுத்தாதீர்கள்!
6. தம் வீடாக இருந்தாலும் அந்நியப் பெண்கள் உள்ளே இருக்கும் போது அவர்கள் தங்களை மறைத்துக் கொள்ள வேண்டும் படி முன்னெச்சரிக்கை செய்த பின் நுழைய வேண்டும்.
7. அடுத்தவர் வீட்டிற்கு சென்றால் வாசலுக்கு நேராக நிற்கக்கூடாது.
8. ஆண்களும் பெண்களும் கலந்திருக்கும் கூட்டங்களுக்கு அறவே செல்லாதீர்கள்! பெண்கள் நடமாட்டம் இல்லாத பாதையில் செல்லுங்கள்!
9. சுற்றுலாத் தலங்களுக்கு செல்லாதீர்கள்! அப்படி செல்வதாகஇருந்தால் மற்றவர்கள் செல்லாத நாளை தேர்ந்தெடுத்து அந்நாளில் செல்லுங்கள்.

10. பஸ், ரயில், விமானம் போன்றவற்றில் பிரயாணம் செய்யும்போது மார்க்க நூல்களை எடுத்துச் சென்று அதை படித்தபடி நேரத்தை கழியுங்கள்! இல்லையெனில் பிரயாணம் செய்யும் பெண்கள் மீது பார்வை படும்.

11. பெண்களின் படம் அல்லது டி.வி. பொருத்தப்பட்டுள்ள பஸ், ரயில், நிலையங்களிலும் தங்கும் விடுதிகளிலும் அலுவலங்களிலும் அந்த திசையில் முதுகை காண்பித்து அமருங்கள்!

12. தேவையின்றி இன்டர்நெட் - இணைய தளத்தை பயன்படுத்தாதீர்கள்!

13. மாற்று மதத்தார் அதிகம் வசிக்கும் பகுதிகளுக்கு சென்றால் யாருடைய முகத்தையும் பார்க்காதீர்கள்.! ஏனெனில் கோடை காலங்களில் அவர்கள் தங்கள் மேனிகளில் அதிகமான பகுதிகளை திறந்தே வைக்கின்றனர். குளிர் காலங்களில் ஆடை அணிந்திருந்தாலும் ஆண்கள், பெண்களுக்கு மத்தியில் வித்தியாசம் இல்லாத அளவிற்கு பெண்கள் ஆண்களைப் போன்று முடிவெட்டிக் கொண்டு கோட் அணிந்து டைய்மாட்டிக் கொண்டு வலம் வருகின்றார்கள். இந்த முஸீபத்திலிருந்து தப்பித்து நம் ஈமானை பாதுகாக்க பார்வையை தாழ்த்துவதைத் தவிர வேறு வழியில்லை.

14. வீட்டில் தனியாக ஒரு போதும் இருக்காதீர்கள்! எந்தவேலையுமின்றி சும்மாவும் இருக்காதீர்கள்!

15. பெண்களின் ஸ்கூல் மற்றும் காலேஜ் இருக்கும் தெருவில் செல்வதை விட்டு விடுங்கள்!

16. திருமணமாகிவிட்டால் தன் மனைவியை சந்தோஷமாக வையுங்கள்!

17. கஃபாவை தவாஃப் செய்யும் போது பாதங்களை பார்க்கும் வண்ணம் பார்வையை தாழ்த்திக் கொள்ளுங்கள்! கண்டிப்பாக பார்வையை உயர்த்தாதீர்கள்!

18. அந்நியப் பெண்களை பார்ப்பதினால் கிடைக்கும் தண்டனைப் பற்றி அடிக்கடி சிந்தியுங்கள்! அந்நியப் பெண்களை பார்த்தவனின் கண்களில் கண்ணாடியை உருக்கி மலக்குமார்கள் ஊற்றுவார்கள். சூடாக்கப்பட்ட கூர்மையான கம்பிகளை கண்களில் குத்துவார்கள் என்றும் சில கிதாபுகளில் எழுதப்பட்டுள்ளது.

19. அந்நியப் பெண்களை ஒரு முறை பார்த்துவிட்டால் இருபது ரகஅத் தொழுவேன் என்ற தண்டனையை நடைமுறைப்படுத்துங்கள்! இன்ஷா அல்லாஹ் சில தினங்களில் பார்வையை தாழ்த்த ஆரம்பித்துவிடுவீர்கள்.

20. ஒவ்வொரு மாதமும் 13,14,15 ஆகிய தினங்களிலும் திங்கள் மற்றும் வியாழக்கிழமைகளிலும் நோன்பு நோற்றுவாருங்கள்! இந்த நோன்புகள் நோற்றும் பார்வையை கட்டுப்படுத்த முடியாவிட்டால் ஹள்ரத் தாவூத்(அலை) அவர்களைப் போல் ஒரு நாள் விட்டு ஒரு நாள் நோன்பு வையுங்கள்!

21. கீழ் காணும் தஸ்பீஹை காலையிலும் மாலையிலும் 100, 100 முறை ஓதுவதை வழமையாக்கிக் கொள்ளுங்கள்!

எனக்கு விருப்பமானவன் அல்லாஹ் தான். நான் தேடுவது அல்லாஹ்வைத் தான். எனக்கு பிரியமானவன் அல்லாஹ் தான். வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை.

22. தினமும் தஹஜ்ஜுத் தொழுகைக்காக எழுந்து அல்லாஹ்விடம், யா அல்லாஹ்! பாவங்களை விட்டு தவிர்ந்திருப்பது எனக்கு சிரமமாக இருக்கிறது. ஆனால் பாவங்களில் ஈடுபடாமல் என்னை பாதுகாப்பது உனக்கு லேசான காரியமாகும். எனவே என் இறைவா! என் உள்ளத்தை தூய்மைப்படுத்தி விடுவாயாக! என் பார்வையைபரிசுத்தப்படுத்துவாயாக! என்று துஆ செய்யுங்கள்!

لَا مَرْغُوْبِيْ اِلَّا اللهُ، لَا مَطْلُوْبِيْ اِلَّا اللهُ، لَا مَحْبُوْبِيْ اِلَّا اللهُ، لَا اِلٰـــهَ اِلَّا اللهُ

கெட்ட பார்வையை விட்டு விலகி தம் பார்வையை பாதுகாத்துக் கொள்ளும் மனிதருக்கு மறுமையில் இரு வெகுமதிகள் வழங்கப்படும்.

1. பார்வையை தாழ்த்திய ஒவ்வொரு முறைக்கும் அல்லாஹ்வை பார்க்கும் பாக்கியம் கிடைக்கும். 2. மறுமையில் அழுவதை விட்டு அந்த கண் பாதுகாக்கப்படும்.

# ஹள்ராத் பீர் ஸாஹிப் அவர்களின் சீரிய உரைகளில் எமது வெளியீடுகள்

1. بدنظری کے نقصانات (اردو)

(தமிழில், ٹمل)

2. அந்நிய பெண்களை பார்பதினால் ஏற்படும் விபரீதங்கள்

(ஆங்கிலத்தில், انگریزی)

3. SIN OF THE EYE

(இச்சிறு நூல் தெலுங்கு மொழியிலும் கிடைக்கும்)

4. معمولات یومیہ (نقشبندیہ)

(தமிழில், ٹمل)

5. அன்றாட அமல்கள் (நக்ஷ்பந்தீ)

6. گناہوں کے نقصانات (ٹمل)
பாவத்தின் பாதிப்புகள்

7. رب غفار کا گنہ گاروں سے پیار (ٹمل)
பாவிகளை மன்னிக்கும் பாசமான அல்லாஹ்

8. گناہ سے کیسے بچیں؟ (ٹمل)
பாவத்தை விட்டு பாதுகாத்து கொள்வது எப்படி?

9. شوہر کی دس خطرناک غلطیاں شوہر کیلئے دس سنہری اصول
கணவன் தவிர்க்க வேண்டிய அபாயகரமான 10 தவறுகள்
கணவனிடம் இருக்க வேண்டிய 10 பண்புகள்

**UNITED WELFARE ORGANISATION**
**ஐக்கிய நலக் கூட்டமைப்பு**
(சமுதாய சேவைகளுக்கு வழிகாட்டும் மையம்)
சமுதாய சேவைகளின் வழிகாட்டுதல்களுக்கு எங்களை அணுகலாம்.
#10/39, First Floor, Anaikar Complex, M.V. Badran Street,
Periamet, Chennai - 600003. Phone : 044 2561 0653, +91 9840921152